

ஆன்மீகத்தில் வழிவழியாய் வாழும் வழி

# எளிய தர்ப்பண பூஜை முறைகள்

(முதல் பகுதி)



சத்ரு ஜயம் வேண்டி
பித்ரு அருள் நாடி
தாத்ரு வருடந்தனில்
சித்த சாஸ்திர பொக்கிஷத்தின்
முதல் பகுதியை
மாத்ரு குரு பாதாரவிந்தங்களில்
சமர்ப்பிக்கின்றோம்.

ஓம் ஸ்ரீ வல்லப கணபதி துணை
ஓம் ஸ்ரீ அங்காள பரமேஸ்வரி துணை

NAMASIVAYA

SIVAYANAMA SIVAYASIVA





SIVASIVA

ஆன்மீகத்தில் வழிவழியாய் வாழும் வழி

# எளிய தர்ப்பண பூஜை முறைகள்

திருக்கயிலாயப் பொதியமுனிப் பரம்பரை
1001–வது குருமஹாசந்நிதானம்
சக்தி ஸ்ரீ அங்காள பரமேஸ்வரி அடிமை

ஸ்ரீ–ல–ஸ்ரீ
**R.V. வெங்கடராமன் சுவாமிகள்**
அவர்கள் திருவாய் மலர்ந்து அருளியது

உ

குருமகா சந்நிதானம்

**ஸ்ரீ-ல-ஸ்ரீ R.V. வெங்கடராமன்**

சுவாமிகளின்

தாயார் ஸ்ரீமதி முத்துமீனாட்சி அவர்கள் மனமுவந்து அளித்த ஆசியுரையின் தமிழாக்கம்:

ஸ்ரீ ராமஜெயம்

என் மகன் வெங்கடராமன் பேசிய சொற்பொழிவுகளில் *1192*க்கு குறையாமல் கேட்டுள்ளேன். அவன் பிறந்தபோது நான் பெற்ற இன்பத்தை விட அவன் ராமன், கண்ணன், நாராயணன், சக்தி, சிவன், முருகன், குரு இவர்ளைப் பற்றிப் பேசும் போது மிக அதிக இன்பத்தைப் பெற்று விட்டேன். அனைவரும், 'எளிய தர்ப்பண பூஜை முறைகள்' மற்றும் அனைத்துப் புத்தகங்களையும் படித்து வெங்கடராமனை ஆசீர்வதிக்கும்படிக் கேட்டு, நான் அவன் தொண்டு உலகெங்கும் பரவ ஸ்ரீராமன் திருவருளால் மனமார ஆசீர்வதிக்கிறேன்.

இப்படிக்கு,

*V. முத்துமீனாட்சி*

## பணிந்துரை

ஓம் ஸ்ரீ சர்வ ஸ்ரீ சாக்த பரப்ரம்ஹ
சர்ப்ப இரட்சகர் ஸ்ரீ அஸ்தீக சித்தர்
ஓம் ஸ்ரீ சர்வ ஸ்ரீ சாக்த பரப்ரம்ஹ
காளஹஸ்தீஸ்வர ஸ்ரீ சதாதப சித்தர்
ஓம் ஸ்ரீ சர்வ ஸ்ரீ சாக்த பரப்ரம்ஹ
மகரிஷி மஹேஸ்வராய கௌஸ்துப
புருஷாய ஸ்ரீ இடியாப்ப சித்தர்

என்றவாறிலங்கும் திருக்கயிலாயப் பொதிய முனிப் பரம்பரையின் 1001வது பீடம் சக்தி ஸ்ரீ அங்காள பரமேஸ்வரி அடிமை **ஸ்ரீ–ல–ஸ்ரீ R.V. வெங்கடராம ஸ்வாமிகள்** தம் குருவருளால் 'எளிய தர்ப்பண பூஜை முறைகள்' என்ற தலைப்பில் அருளியவற்றை இச்சிறு நூலாய்ப் பதித்துள்ளோம். ஸ்ரீ சுவாமிகளின் அருள் மொழிகள் அனைவரையும் சென்றடைந்து அனைவரும் ஒளிமயமான வாழ்வைப் பெறவும், உன்னத ஆன்மீக நிலைகளை அடையவும் இறைவனை வேண்டி, குருவருளால் சமர்ப்பிக்கின்றோம்.

ஓம் குருவே சரணம்

ஸ்ரீ அங்காள பரமேஸ்வரி அடிமைகள்

# நோய் தீர்க்கும் மருந்து

சில கோயில்களின் மூலவர்கள் குறிப்பிட்ட வியாதிகள் குணமாவதற்கென விசேஷ அனுக்ரஹம் புரிகின்றனர். இதோ சில தல மூர்த்திகளும் அவர்கள் தீர்க்கும் வியாதிகளும்.

| | | |
|---|---|---|
| 1. | நரம்பு வியாதிகள் | திருமுல்லைவாயில் மாசிலாமணீஸ்வரர். |
| 2. | தோல் நோய்கள், பால் நோய்கள், தொழுநோய் | சென்னை – கோவூர் சுந்தரேஸ்வரர் வில்வ பிரசாதம். ஸ்ரீரங்கம் சக்கரத்தாழ்வார் தீர்த்தம். |
| 3. | கழுத்து நோய்கள் | குன்றத்தூர் திருநாகேஸ்வரர். |
| 4. | இருதய நோய்கள் | திருநின்றவூர் ஹிருதயபாலீஸ்வரர். |
| 5. | அனைத்து நோய்கள் குறிப்பாக அறுவை சிகிச்சைகள் | பாண்டிச்சேரி அருகே சின்னபாபு சமுத்திரம் படேசாகிப் சமாதி. |
| 6. | கண்நோய்கள், குருடர்கள் | சென்னை அருகே ஞாயிறு சிவன் கோயில், மயிலாப்பூர் வெள்ளீஸ்வரர். |
| 7. | பல் நோய்கள் | மகோன்னத சித்தர் – திருமழிசை ஜெகன்னாதப் பெருமாள் ஆலயம். |
| 8. | எலும்பு நோய்கள் | கதாதலீஸ்வர சித்தர் – சென்னை மப்பேடு சிங்கீஸ்வரர் சிவாலயம். |
| 9. | குழந்தைகளின் நோய்கள் | திருச்சி திருவாசி சிவாலயம், மதுரை குழந்தையானந்தா சுவாமிகள் சமாதி. |
| 10. | மனோவியாதிகள் | திருச்சி குணசீலம் பாபவினாச தீர்த்தம். |
| 11. | வெட்டுக்காயங்கள் | திருச்சி குணசீலம் தார்மீகநாதர். |

ஓம் குருவே சரணம்

உ

ஸ்ரீ வல்லப கணபதி துணை

ஸ்ரீ அங்காள பரமேஸ்வரி துணை

ஓம் குருவே சரணம்

# எளிய தர்ப்பண பூஜை முறைகள்

## நூன்முகம்

இறையருளால் நல்ல எண்ணங்களையே நினைக்க வேண்டும், நல்ல வார்த்தைகளையே பேசவேண்டும், நல்ல காரியங்களையே செய்ய வேண்டும் என்பதே மக்களில் பெரும்பாலோரின் விருப்பம்.

ஆனால் உண்மையில் மனிதனின் விருப்பத்திற்கு நேர்மாறாக வன்முறைகளும் முறைகேடான சம்பவங்களும் நாளுக்கு நாள் அதிகரித்துக்கொண்டே போகின்றன. விஞ்ஞான முன்னேற்றத்தால் எல்லா சுகபோகங்களையும் மனிதன் பெற்றிருந்தாலும் நிம்மதி என்ற ஒன்றின் அடிச்சுவட்டைக் கூட காணமுடியாமல் அவன் தவிக்கிறான்.

மனிதனின் எண்ணத்திற்கும் செயலுக்கும் இடையே ஏன் இந்த வேறுபாடு? நல்ல எண்ணம் ஏன் நல்ல செயல்பாட்டில் முடியவில்லை? இதற்கு சித்தர்கள் விளக்கம் அளிக்கிறார்கள். ஒரு மனிதன் எந்த அளவிற்குப் புண்ணிய சக்தியைப் பெற்றிருக்கிறானோ அந்த அளவிற்கு அவனால் நற்காரியங்களை நிறைவேற்ற முடியும். இன்றைய சூழ்நிலையில் மனிதன் எவ்வளவுதான் முயற்சி செய்து நற்காரியங்களை இயற்றினாலும் அதனால் பெறும் புண்ணிய சக்தி வந்த வேகத்தைவிட அதிக அளவில் செலவாகிவிடுகிறது. இந்த ஒரு இக்கட்டான சூழ்நிலையில் ஆட்பட்ட மனிதனைக் காப்பாற்ற முன்வருவது விண்ணுலகம் அடைந்த அவனது முன்னோர்களே.

மேலுலகம் சென்ற முன்னோர்கள் தனது சந்ததியினர் நல்ல காரியங்களைச் செய்ய சதா சர்வ காலமும்

இறைவனிடம் வேண்டிப் பிரார்த்தனை செய்தவாறே இருக்கின்றனர். நாம் இறைவனுக்காக ஒரு விரலை அசைத்தால் கூட அது நமது முன்னோர்களின் ஆசியினால்தான்; அவர்களது ஆழ்ந்த வழிபாடுகளால்தான்.

அத்தகைய நமது முன்னோர்களை வழிபடும் ஒரு முறையே அவர்களுக்கு நன்றி செலுத்தும் ஒரு பிரார்த்தனையே தர்ப்பணம் என்பதாகும். இது எளிமையாக அனைவரும் செய்யக்கூடிய, செய்யவேண்டிய ஒரு வழிபாடாகும். சாதி, சமய பேதமின்றி, ஆண், பெண் வித்தியாசம் பாராட்டாமல் இன்னும் சொல்லப் போனால் மனிதன், விலங்குகள் என்ற உணர்வுகளையும் கூடக்கடந்து எல்லா உயிரினங்களும் ஆற்றவேண்டிய அற்புத பூஜையே தர்ப்பணம் என்பது.

திருக்கயிலாயப் பொதிய முனிப்பரம்பரை 1001–வது குருமகா சந்நிதானம் சக்தி ஸ்ரீ அங்காள பரமேஸ்வரி அடிமை ஸ்ரீ–ல–ஸ்ரீ வெங்கடராம சுவாமிகள் அவ்வப்போது திருவாய் மலர்ந்தருளிய தர்ப்பண முத்துக்களைக் கோர்த்து ‘எளியதர்ப்பண பூஜை முறைகள்’ என்ற ஒரு சிறு நூலாக இங்கு அளிக்கிறோம். இதை அனைவரும் படித்து உய்த்துணர்ந்து தங்கள் வாழ்வில் தர்ப்பண பூஜை முறைகளைத் தவறாமல் கடைபிடித்து அனைத்துலோக பிதுர் தேவதைகளின் ஆசியைப் பெற எல்லாம் வல்ல அண்ணாமலையாரின் திருப்பாதங்களைச் சரணடைகின்றோம்.

சர்வலோக பிதுர் தேவதைகளுக்கு அரோஹரா!

*ஓம் குருவே சரணம்*
*ஸ்ரீ அங்காள பரமேஸ்வரி அடிமைகள்.*

உ

ஸ்ரீ வல்லப கணபதி துணை

ஸ்ரீ அங்காள பரமேஸ்வரி துணை

ஸ்ரீ சுசரித சரஸ்வதி துணை

# எளிய தர்ப்பண பூஜை முறைகள்

அன்று நிறைந்த ஆடி அமாவாசை தினம். **கும்பகோணம் சக்கரப்படித்துறை**யருகே அமைந்துள்ள ஸ்ரீபெருமாள் கோயிலில் பரம்பொருளாம் ஸ்ரீ ஆதிசிவனின் பூர்ணாம்ச அவதார மூர்த்தியாம் ஸ்ரீ அகத்தியப் பெருமானும், அவர்தம் அருமைச் சீடர்களும் அமர்ந்திருக்கின்றனர். அப்புனித நாளுக்குரித்தான ஜபம், பூஜை, தியானம் மற்றும் தர்ப்பணங்களைத் தங்கள் குருநாதரின் முன்னிலையில் செய்து முடித்ததன் மனமகிழ்ச்சியும், நிறைவும் சீடர்களின் முகத்தில் தாண்டவமாடுகிறது.

**போகர்:** சற்குரு மஹாதேவா! **எந்த ஒரு நற்காரியத்தையும் குருநாதர் முன்னிலையில் செய்யும் போது அதன் பலனை அளவிடவே முடியாது** என்று தாங்கள் ஏற்கனவே அருளியுள்ளீர்கள். இந்நன்னாளில் தங்கள் கருணையால் தாங்கள் உடனிருந்து அனைத்து பூஜைகளையும் செய்யும் பேறு பெற்றோம். நாங்கள் எவ்வளவு பாக்கியசாலிகள்!

**அகத்தியர்:** ஆம், சீடனே! எல்லாம் இறைவனின் கருணை!

**போகர்:** ஆனால், குருதேவா! தற்காலத்தில் மக்கள் இதுபோன்ற புனித நாட்களில் செய்யவேண்டிய பூஜை, தர்ப்பணம், ஹோமம் போன்ற வழிபாடுகளைக்கூட செய்வதில்லையே.

**அகத்தியர்:** இவற்றைமட்டுமா, கலியுக மக்கள் எத்தனையோ இறை விஷயங்களை, நித்ய வழிபாட்டு முறைகளை மறந்தேவிட்டனரே! 'கண்டதே காட்சி, கொண்டதே கோலம்' என்று மனம்போனபடி வாழ்வை நடத்திச் சென்று கர்ம வினைகளை மூட்டைமூட்டையாகச் சேர்த்துக் கொண்டதுதான் பலன்.

**போகர்:** கலியுக மாந்தர் அறியாமையால் அஞ்ஞான இருளில் மூழ்கிக் கிடப்பதைப் பொறுத்தருளி, அவர்கள் நல்வாழ்வு வாழத் தேவையான விஷயங்களையும் விளக்கங்களையும் தந்தருள வேண்டுகிறோம், குருதேவா!

**அகத்தியர்:** (சிரித்துக்கொண்டே) புரிகிறது, எனதருமைச் சீடனே! கலியுக மக்களுக்காக இந்நன்னாளில் ஏதேனும் பெற்றுத் தர வேண்டும் என விரும்புகிறாய் போலும்! ஒவ்வொரு கணப்பொழுதும் பிறர் நலனையே கருத்தில் கொண்டவனாயிற்றே நீ! சரி, கேட்க விரும்புவதைக் கேள்!

**போகர்:** இன்றைய உலகில் மனிதர்களுக்குப் போதிய உடல் ஆரோக்கியமோ, மன வலிமையோ இல்லை. ஒவ்வொரு மனிதனும் காலை எழுந்தது முதல் இரவு படுக்கச் செல்லும் வரை பலதரப்பட்ட பிரச்னைகளை தினந்தோறும் சந்திக்க வேண்டியுள்ளது. ஒருவரு க்கொருவர் பிரச்னைகளின் வகைகள்தான் மாறுபடு கின்றனவே தவிர, பிரச்னைகள் இல்லாத மனிதனே இல்லை எனக் கூறலாம். பூவுலகில் அனைத்து மாந்தரும் பிரச்சனைக் கடலில் மூழ்கித் தத்தளித்துக் கொண்டிருப்பதன் காரணத்தை அறிய விரும்புகிறோம் குருதேவா!

**அகத்தியர்:** ஒரே வரியில் உனக்கு பதில் அளிக்கிறேன் ***கலியுலகில் மக்கள் சந்தித்துக்***

கொண்டிருக்கும் அனைத்துப் பிரச்னைகளுக்கும் மூலகாரணம் அவர்கள் தங்களுடைய முன்னோர் களுக்குச் செய்ய வேண்டிய பித்ரு தர்ப்பண நீத்தார்கடன் பூஜைகளை முறையாகச் செய்யாததே.

**புலிப்பாணி:** கேட்கவே வியப்பாக இருக்கிறதே, குருதேவா! பித்ரு தர்ப்பண பூஜைகள் அவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்தவையா?

**அகத்தியர்:** ஆம், எனதருமைச் சீடனே! பூவுலகில் பிறக்கும் ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய இந்த மானிட வாழ்வுக்குக் காரணமான தனது பித்ருக்களை முறையாக வணங்கி அவர்களுக்கு உரித்தான தர்ப்பணங்களையும், அப்பூஜைக்குரித்தான தான தருமங்களையும் செய்தே ஆக வேண்டும். **இதற்கு விதிவிலக்கே கிடையாது**

ஆதியும் அந்தமும் இல்லாத அருட்பெரும் சுடராம் திருஅண்ணாமலையாரே வல்லாள மஹாராஜாவுக்குத் தர்ப்பண பூஜைகளை நிகழ்த்துகின்றார் என்றால் சாதாரண மனிதன் எவ்வளவு சிரத்தையுடன் தன் மூதாதை யருக்குத் தர்ப்பணம் அளித்தல் வேண்டும்? (இன்றும் கூட திருஅண்ணாமலையில் ஸ்ரீ சிவபெருமான் வல்லாள மஹாராஜாவுக்குத் தர்ப்பணம் கொடுக்கும் விழா வருடம் தோறும் வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. அன்றைய தினம் திருஅண்ணாமலையில் தமது மூதாதையருக்காகத் தர்ப்பணம் அளிக்கின்ற எவரும் சாட்சாத் சிவபெருமானுடன் சேர்ந்து தர்ப்பண பூஜைகளைச் செய்யும் பாக்கியத்தைப் பெறுகின்றனர். எத்தகைய கிடைத்தற்கரிய வாய்ப்பு!)

**போகர்:** தர்ப்பண பூஜைகளைப் பற்றி விளக்கமாக அறிந்துகொள்ள விரும்புகிறோம், குருதேவா! பித்ருக்கள் என்போர் யாவர்?

**அகத்தியர்:** இறந்தவர்கள் அனைவரும் பொதுவாக **இருள்பகுதி, ஒளிப்பகுதி** என்ற இரு பகுதிகளுக்கு அவரவர்கள் செய்த பாவ, புண்ணிய கர்மவினைகளுக்கு ஏற்பச் செல்வர். நல்லவர்களுக்கு ஒளிப்பகுதியில் இடம் கிடைக்கும். ஒளிப்பகுதியில் பித்ரு லோகம், தேவ லோகம், கந்தர்வ லோகம், தேவதா லோகம், புண்ணிய லோகம், தீர்த்த லோகம் என்று பல வித நிலைகள் உண்டு. இறந்த மூதாதையர்கள் ஒளிப்பகுதிக்குச் செல்லும் ஆன்மீகச் சக்தி பெற்றிருந்தால் அவர்களில் பலர் பித்ரு லோகத்தில் வசிப்பர்.

உறக்கமோ, பசியோ அற்ற மிக உயரிய நிலையில் உள்ள பித்ருக்கள் பூலோகத்தில் வாழும் தமது வம்சா வழியினரின் நல்வாழ்விற்காக சதாசர்வகாலமும் பூஜைகள், பிரார்த்தனைகள் போன்றவற்றைச் செய்து வருகின்றனர்.

**போகர்:** மானுடப் பிறவி எடுத்தோருக்கு மட்டும்தான் பித்ருக்கள் உண்டா, குருதேவா?

**அகத்தியர்:** அப்படியில்லை, போகா! அனைத்து ஜீவன்களுக்கும் பித்ருக்கள் உண்டு. புல், பூண்டு முதல் எறும்பு, யானை உள்ளிட்ட அனைத்து ஜீவராசிகளுக்கும் பித்ருக்கள் உண்டு. சராசரி மனிதனின் அறிவிற்கெட்டாத ஆன்மீக ரகசியம் இது.

**புலிப்பாணி:** பித்ரு நிலையே ஒளிப்பகுதியில் உள்ள ஓர் உயரிய நிலை என்று கூறினீர்கள், அப்படிப்பட்ட உயர்ந்த நிலை கொண்டோருக்காக பூஜைகள், செய்வது அவசியமா, குருதேவா!

**அகத்தியர்:** (புன்சிரிப்புடன்) தமது வம்சாவழி அளிக்கும் தர்ப்பண பூஜைகள், பிரார்த்தனைகளை எதிர்பார்த்து நிற்கும் நிலையில் பித்ருக்கள் இல்லை.

***ஒவ்வொரு மனிதனும் தனது நல்வாழ்விற்காகவே பித்ருதர்ப்பணங்களைச் செய்தாக வேண்டும்.***

பித்ரு தர்ப்பணமான பூஜையைத் தொடர்ந்து செய்து வந்தால்தான் நாம் வாழ்வில் அனுபவிக்கின்ற சுக போகங்கள் அனைத்தும் நம் மூதாதையரின் நற்கர்ம பலன்களின் விளைவே என்ற ஆழ்ந்த நம்பிக்கை வலுக்கும். பின்னர் காலப்போக்கில் அதுவே 'நம்மால் ஏதும் நிகழ்வதில்லை; எல்லாம் ஸ்ரீ நாராயணன் செயல்' என்ற இறை நம்பிக்கையாக மலரும்.

**போகர்:** தர்ப்பண பூஜைகளை முறையாகச் செய்யாததால் உண்டாகும் விளைவுகள் என்னென்னெ, குருதேவா?

**அகத்தியர்:** மனிதன் என்ற சொல்லுக்கே 'நன்றி மறவாதவன்' என்ற ஒரு பொருள் உண்டு. பூவுலகில் மானுடப்பிறவி என்பது கிடைத்தற்கரிய ஓர் பெரும் பொக்கிஷம். அதைத் தனக்களித்த தன் மூதாதையர்களை நன்றியுடன் நினைவுகூர்வது ஒவ்வொரு மனிதனின் கடமையல்லவா?

மேலும் தர்ப்பணபூஜைகளை முறையாக நிறைவேற்றாவிடில் 'தான் சம்பாதித்தது, தன்னால்தான் நடந்தது, தன்னால் எதையும் சாதிக்க இயலும்' போன்ற ஆணவ, அகங்கார எண்ணங்கள் ஏற்பட்டு மனிதன் தீய வினைகளுக்கு ஆட்பட்டு வாழ்வைப் பாழ்படுத்திக் கொள்வான். இப்பெரும் மாயையில் இருந்து விடுபட தர்ப்பண பூஜைகளை முறையாகச் செய்வதே சிறந்த வழி. ***இக்கலியுலகில் மனிதன் தர்ப்பண பூஜைகளை முறையோடு செய்து ஒரே ஒரு பித்ருவின் ஆசியைப் பெற்றால் கூடப்போதும். எளிதில் கடைத்தேறி விடலாம்!***

**போகர்:** குருதேவா! பித்ருதர்ப்பண பூஜைகளைச் சரிவர செய்யாவிடில் பித்ருக்களின் சாபம் வந்து சேரும் எனக்கூறுகிறார்களே. மிக உயர்ந்த நிலையில் இருக்கும் பித்ருக்கள் கூட சாபங்களை அளிப்பார்களா?

**அகத்தியர்:** துர்வாஸர், ஆங்கிரஸர், பரசுராமர், பாரத்வாஜர் போன்ற உத்தமரிஷிகள்கூடத் தம் அடியார்களைத் திருத்தும் பொருட்டு சாபங்களை அளித்துள்ளனரே!

ஒரு தந்தை தன் மகனை நல்வழிப்படுத்துவதற்காக அவனைக் கண்டித்து, அடித்து, உதைத்து திருத்துதல்போல, பித்ருக்கள் சாபங்கள் மூலம் பல கஷ்டங்களை அளித்துத் தம் வம்சாவழியினரைத் திருத்திக்கரையேற்றுகின்றனர். பித்ரு சாபங்கள் தீரத்தான் பலவிதமான தானதர்மப் பரிகார முறைகள் உள்ளனவே!

உண்மையில் நடைபெறும் ஆன்மீக விந்தை என்னவென்றால், தம்முடைய வம்சாவழியினரைப் பல தான, தர்மகாரியங்களில் ஈடுபடுத்துவதற்காகப் பல சாபங்களை அளித்து, அவற்றை நிவர்த்தி செய்யும் பரிகாரமுறைகளையும் மஹான்கள், ஞானிகள் மூலமாகப் பித்ருக்களே உணர்த்துகின்றனர்.

**புலிப்பாணி:** பித்ருக்கள் தமது வழித்தோன்றல் களோடு நேரடியாகவே தொடர்புகொள்ள இயலாதா, குருதேவா?

**அகத்தியர்:** உத்தம இறைநிலை பூண்டுள்ள பித்ருக்கள் மிக உயரிய ஆன்மீக சக்தி கொண்டவர்கள். ஒளி மயமான தேகம் கொண்ட அவர்களுக்கு எந்த வடிவமும் எடுக்கக் கூடிய வல்லமையும் உண்டு. ஆனால் தமது வம்சாவழியினர் என்றாலும் கூட அவரவர்களுடைய

பாவ, புண்ணிய கர்ம வினைகளுக்கு ஏற்பவே அருளை வழங்குகின்றனர்.

மேலும் பரிசுத்தமான தனது பித்ருவோடு நேரடித் தொடர்பு கொள்ளும் அளவிற்குத் தேவையான ஆன்மீக சக்தியினை எந்த ஒரு மனிதனும் பெற்றிருப்பதில்லை. எனவேதான், அவனைக் கரையேற்றும் பொருட்டு பூலோகத்திலுள்ள தேவதைகள், மகரிஷிகள், யோகிகள், சற்குருமார்கள் போன்றோரின் உதவியினைப் பித்ருக்கள் நாடுகின்றனர். இதில் சற்குருவே விண்ணுலகிற்கும், மண்ணுலகிற்கும் இடையே ஓர் ஆன்மீகப் பாதையாக பாலமாக விளங்குகின்றார்.

**சீடர்கள் அனைவரும்:** (ஒருமித்த குரலில்) சற்குவின் மஹிமை கேட்கக் கேட்கத் தெவிட்டாது! மேலும் விளக்க வேண்டுகிறோம், ஐயனே!

**அகத்தியர்:** பூலோக ஜீவன்கள் எதுவாயினும் அதற்குப் பிறப்பு இறப்பற்ற நிலையைத் தரவல்ல சற்குருவே எத்தனையோ கோடிக்கணக்கான மைல்கள் தாண்டி பல லோகங்களில் வாழும் பித்ருக்கள், கந்தர்வர்கள், ரிஷிகளுக்குக் கூட முக்தியளிக்கும் தெய்வீக சக்தி பொருந்தியவர். எவ்வாறு தெரியுமா?

பித்ரு தேவர்கள் நிலையே மிக உயர்ந்த நிலை என்றாலும் அவர்கள் மேலும் ***உயர்ந்த நிலைகளை*** அடையவேண்டுமென்றால், அவர்களுக்கு விதிக்கப் பட்டுள்ள நற்காரியங்களைச் செய்தேயாக வேண்டும். ஒவ்வொரு பித்ருவும் அவரவர்களுடைய சந்ததி யினருக்காகப் பிரார்த்தித்து அவர்களை நல்வழிப்படுத்தி என்றும் இறைநினைவுடன் வாழச் செய்வதே பித்ருக்களுக்குரித்தான கடமையாகும்.

பித்ருக்களில் வசு, ருத்ர, ஆதித்ய பித்ருக்கள் என்று முக்கியமான மூன்று வகைகள் உண்டு. இவை தவிர

எண்ணற்ற வகையான பித்ருலோகங்களில் உள்ள பித்ருக்கள் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு வகையான கடமைகள் விதிக்கப்பட்டுள்ளன. உதாரணமாக, தாவரங்களை மேல்நிலைப்படுத்த ஒரு வகை பித்ருக்கள், நாலுகால் ஜீவராசிகளை உயர்த்த ஒரு வகையினர், பறவைகளுக்காக வேறு வகையினர், நீர் வாழ் உயிரினங்களை மேம்படுத்த ஒரு வகை பித்ருக்கள் என பலதரப்பட்ட பித்ரு வகையினர் இப்பூவுலகில் உள்ள அனைத்து ஜீவராசிகளையும் ஆன்மீக வழியில் உயர்த்த அல்லும் பகலும் அரும்பாடுபட்டு வருகின்றனர்.

பொதுவாக பித்ருக்களுக்கு பசியோ, உறக்கமோ கிடையாது. எனவே எப்போதுமே அவர்கள் தம் வம்சாவழியினர் ஆன்மீக வழியில் முன்னேறக் கடுமையாகப் பாடுபடுகின்றனர். ஆனால் பூவுலகில் மனிதனோ மாயைச் சுழலில் அகப்பட்டுத் தன் வாழ்வினை முழுமையாக வீணாக்கிக் கொண்டே இருப்பது வழக்கமாகி விட்டதொன்று. எனவே பித்ருக்கள் சற்குருவை நாடித் தங்கள் சந்ததியினரைக் கரையேற்றுமாறு வேண்டு கின்றனர்.

போகர்: ஐயனே! கருணைக் கடலாம் சற்குருநாதர் தம்மை நாடி வந்த பித்ருக்களுக்குக் கருணைபுரியும் முறையை விளக்க வேண்டுகிறோம்.

அகத்தியர்: மஹான்கள் தலைசிறந்த மனோரீதியான ஆற்றலைப் (Telepathy) பெற்றிருப்பதால் அவர்களால் எந்தப்பித்ரு தேவருடனும் நினைத்த உடன் ஆன்மீக தொர்பு கொள்ள முடியும் என்றாலும் ஆன்மீக விந்தைகளை இயற்கை நியதிக்கு முரணாகச் செய்வதில்லை. சித்தமெல்லாம் சிவன்பால் இருப்பதால் அவர்கள் இறைவன் இட்ட நியதிப்படியே செயல்படுகின்றனர். **MIRACLES ARE NOT PERFORMED**

**FOR WHAT THEY (SATGURU) PERFORM BECOME MIRACLES.**

சாதாரணமாக மூதாதையருக்கு அமாவாசை, பௌர்ணமி, மாதப்பிறப்பு சங்கராந்தி, சூரிய சந்திர கிரஹணங்கள் போன்ற விசேஷ தினங்களில்தான் பூவுலகிற்கு வர அனுமதியுண்டு. ஆனால் பூலோகத்தில் எந்தக் கோயிலுக்கும் எப்போதும் விஜயம் செய்ய இறை அனுமதி உண்டு.

சற்குருநாதர் தம்மை நாடிவந்த அடியார்களின் கர்மவினைப் பாங்கிற்கேற்ப அவர்களுக்கு உரித்தான உழவாரத் திருப்பணிகளுக்கு அனுமதி அளிக்கின்றார். கோயில் உழவாரப் பணியில் தாம் ஈடுபடுத்தும் அடியாரது உடலில் சூட்சுமமாகப் புகுந்து இறைப்பணி ஆற்ற அவர்களது பித்ருக்களுக்கும் அனுமதி அளிக்கின்றார்.

ஒரு அடியாரது உடலில் பல பித்ருக்கள் ஒரே சமயத்தில் சூட்சுமமாகப் புகுந்து செயல்படுவதுண்டு. இதற்கான ஆற்றல் சாதாரணமாக எந்த அடியாரிடமும் இருப்பதில்லை. பல பித்ருக்களின் சூட்சும சரீரங்களைத் தாங்கும் சக்தியையும் சற்குருவே அடியாருக்கு அளிக்கின்றார். பூலோகத்தில் வாழ்ந்தபோது எந்தக் கோயிலிலும் உழவாரத் திருப்பணி செய்யும் வாய்ப்பைப் பெறாத பித்ருக்கள் தம் சந்ததியினரின் உடலில் புகுந்து அக்கர்ம பாக்கியினைத் தீர்த்துக்கொள்வதோடு, தாங்களும் உய்வு பெற்றுத் தம் வம்சாவழியினரையும் மேம்படுத்துகின்றனர்.

**சீடர்கள்: *நீத்தார்கடன் (அ) பித்ரு சாபத்திற்குச் சிறந்த பரிகாரம் சற்குருவின் ஆணைப்படி நடைபெறும் கோயில் உழவாரத் திருப்பணியே*** என்று தாங்கள் அடிக்கடிக் கூறி வருவதன் முழுப்பொருளை இன்றுதான் உணர்ந்தோம், குருதேவா!

**அகத்தியர்:** பித்ரு சாபம் மட்டுமல்ல, எனதருமைக் குழந்தைகளே! ***கலியுலகில் மனிதன் சந்திக்கும் எப்படிப்பட்ட பிரச்னைக்கும் தீர்வும், பரிகாரமும் தரவல்லவர் சற்குரு ஒருவரே!*** இதை அறிந்த பின்னராவது ஒவ்வொரு மனிதனும் சற்குருவைத் தேடி அவரது பாதக் கமலங்களில் சரணடைவதையே வாழ்வின் தலையாய கடமையாகக் கொள்ளட்டும்!

**போகர்:** தர்ப்பணம் இடுதல் என்றால் என்ன என்று அறிய விரும்புகிறோம், குருதேவா!

**அகத்தியர்:** தர்ப்பணம் இடுதல் என்றால் பித்ருக்களை நினைத்து அவர்களை முறையாக வணங்கி, ஆசி பெறுதல் என்று பொருள்.

தர்ப்பண பூஜைகளை முறையாகச் செய்து வரும் தமது வம்சாவழியினர் அன்னதானம், உழவாரத் திருப்பணி, இலவச மருத்துவ உதவி, கல்விதானம், வஸ்திரதானம் போன்ற இறைப்பணிகளில் ஈடுபடும்போது, பித்ருக்கள் மிக்க ஆனந்தத்துடன் தங்கள் ஆன்மீக சக்தியை அளிக்கின்றனர். பித்ருக்களின் இந்த ஆசீர்வாதமே தனபாக்யம், வாகனம், வீடு அமைதல், திருமணம் கைகூடுதல், பிள்ளைப்பேறு போன்ற அனுக்ரஹங்களாக மாறி அமைகின்றன.

**புலிப்பாணி:** தர்ப்பை, எள், நீர் கொண்டு தர்ப்பணம் இடுவது ஏன், குருதேவா?

**அகத்தியர்:** மனிதர் உயிர்வாழ அன்னம் தேவை. தேவர்கள் அதனை அக்னி மூலமாகவும், கந்தர்வர்கள் பசு நெய் மூலமாகவும், பித்ருக்கள் நீர் மூலமாகவும் ஆஹூதிகளை ஏற்கின்றனர்.

தர்ப்பைப் புல் தேவ லோகத்து மூலிகை. அது எத்தகைய மின்சக்தியையும் தாங்கக்கூடிய வல்லமை

வாய்ந்தது. கடும் மின்னல்களை ஏற்கக்கூடிய ஆன்மீக சக்தி கொண்டது.

மேலும் பல்லாயிரக்கணக்கான பித்ரு லோகங்களில் விதவிதமான பித்ருக்கள் தங்கள் தினசரி பூஜையில் எள் தானிய மணிகளைக் கொண்டு பித்ரு லோகங்களின் நாயகரான ஸ்ரீ மஹாவிஷ்ணுவை பூஜிக்கின்றனர். அவர்தம் உடலிலிருந்தே எள்ளாகிய புனிதமான தாவரம் தோன்றியது.

மேற்கண்ட காரணங்களால்தான் தர்ப்பண பூஜைக்கு எள், நீர், தர்ப்பை பயன்படுத்தப்படுகின்றன.

**போகர்:** குருதேவா! பித்ரு தர்ப்பண பூஜைகள் அனைவருக்கும் உரித்தானதல்ல என்ற ஒரு கருத்து நிலவுகிறதே!

**அகத்தியர்:** அது மிகமிகத் தவறான கருத்து. இப்பூவுலகில் மானிடப்பிறவி எடுத்த அனைவருமே தர்ப்பண பூஜைகளை நிறைவேற்றியே தீரவேண்டும். ஜாதி, மத, இன, மொழி பேதமின்றி அனைவரும் கட்டாயம் செய்ய வேண்டிய இறை வழிபாட்டு முறைகளில் முதலிடம் வகிப்பது தர்ப்பண பூஜையே. அதுவும் பகுத்தறிவுடன் கூடிய ஆறறிவுடையவனாக மனிதனிருப்பதால் அவனுக்கு பூலோகத்திலுள்ள ஓரறிவு முதல் ஐந்து/ஆறு அறிவுடைய ஏனைய ஜீவன்களுக்கும் தர்ப்பணம் அளிக்க வேண்டிய கடமை உண்டு.

**புலிப்பாணி:** தர்ப்பண பூஜை முறைகளும், மந்திரங்களும் மிகவும் கடினமாக இருப்பதாகப் பலர் கருதுவதாலேயே தர்ப்பணம் கொடுக்கும் வழக்கம் குறைந்து விட்டதா, குருதேவா!

**அகத்தியர்:** அப்படியில்லை சீடனே! மனிதனின் அசிரத்தையான மனப்பாங்கும், குறுகிய சுயநல

மனப்பான்மையுமே இதற்கு காரணம்! தொலைக்காட்சிப் பெட்டி (TV) முன் மணிக்கணக்காக அமர்ந்திருப்பதோ, திரை அரங்குகளில் பலமணிநேரம் கால் வலிக்க நின்று கொண்டிருப்பதோ மக்களுக்குக் கடினமாகத் தெரியவில்லையே!

உண்மையான ஆர்வத்துடன் தக்க பெரியோர்களை நாடி, பயின்று, முறையான தர்ப்பணம் அளித்தால் விசேஷமான பலன்கள் நிச்சயம் உண்டு. இதை அனைவரும் மனதில் கொள்ளட்டும்!

**போகர்:** அனைத்துப் பாமர மக்களும் உய்வடைய எளிமையான தர்ப்பண பூஜை முறை ஒன்றினை அருள வேண்டுகிறோம், மஹாதேவா!

**அகத்தியர்:** தர்ப்பண பூஜை மட்டுமல்ல, அனைத்து பூஜை முறைகளையும் அந்தந்த கால கட்டத்திற்கேற்பவும், மனிதனின் தேவைக்கேற்பவும், எளிமையாக முறைப் படுத்தி எமது வழித்தோன்றல்கள் மூலம் உலகிற்கு அறிவிக்கத் திருவுளம் கொண்டுள்ளேன்! மக்கள் அவர்களைத் தேடி, நாடி, அறிந்து பயன்பெறட்டும்!

## எளிய தர்ப்பண முறை – பொது விளக்கங்கள்

தர்ப்பண பூஜை முறையில் முதலாவதாக, தர்ப்பைப் புல் கொண்டு சட்டம் அமைத்து, பித்ருக்களாம் மூதாதையரை தர்ப்பைப் புல்லின்மேல் அவர்களுக்கு உரிய சூட்சும தேகத்தில் எழுந்தருளச் செய்கின்றோம்.

தர்ப்பையில் எழுந்தருளி நிற்கும் பித்ருக்களின் பெயர், கோத்திரம் சொல்லித் துதித்து மூன்றுமுறை எள் கலந்த நீரை தர்ப்பைப் புல்லின் மேல் வார்க்க வேண்டும். இதுவே எளிய தர்ப்பணமாகும்.

## நீத்தார்க்கு நீர்வார்க்கும் முறை (அ)

## தர்ப்பண முறை – வம்சம் பற்றிய விளக்கம்

தந்தை, தாய் வம்சங்களில் அவரவருடைய அப்பா, அம்மா (தாத்தா, பாட்டி வரை) முறைகளில் **12 பேருக்குத் தர்ப்பணம் அளிக்க வேண்டும். எவர் உயிருடன் இருக்கின்றாரோ, அவரை விடுத்து அவர்களது மூதாதையருக்குத் தர்ப்பணம் தருவதே சரியான முறை** (உ–ம்) தந்தை உயிரோடு இருந்தால் அவரை விட்டுவிட்டு தாத்தா, பாட்டனார், மூப்பாட்டனாருக்குத் தர்ப்பணம் அளிக்க வேண்டும்.

முதல் பகுதி:

தர்ப்பணத்தின் முதல் பகுதியில், தந்தை வர்க்கத்தில்

| **ஆண் வகை** | **பெண் வகை** |
| --- | --- |
| தந்தை | தாய் |
| தாத்தா | பாட்டி (தந்தையின் தாய்) |
| பாட்டனார் | முப்பாட்டி (தந்தையின் பாட்டி) |

ஆகிய ஆறு பேர்களுக்குத் தர்ப்பணம் அளிக்கப்பட வேண்டும்

இரண்டாம் பகுதி:

தாய் வர்க்கத்தில்

| **ஆண் வகை** | **பெண் வகை** |
| --- | --- |
| தாத்தா (தாயின் தந்தை) | பாட்டி (தாயின் தாய்) |
| பாட்டனார் (தாயின் தாத்தா) | முப்பாட்டி (தாயின் பாட்டி) |
| முப்பாட்டனார் (தாயின் பாட்டனார்) | கொள்ளுப் பாட்டி (தாயின் முப்பாட்டி) |

ஆக ஆறு பேர்களுக்குத் தர்ப்பணம் அளிக்கப்படுகின்றது

## தர்ப்பண சட்டம் அமைக்கும் முறை

1. முதலில் மூன்று தர்ப்பைகளை நேராக இடைவெளி விட்டு ஒன்றுக்கொன்று இணையாக பரப்பவேண்டும்.

தந்தை வர்க்கத்தில் உயிரோடிருப்பவரை விடுத்து, இறந்த மூதாதையர் மூன்று பேரை வரிசையாகக் குறிப்பவையே தர்ப்பைகளின் மேல்நுனிகள் தர்ப்பைகளின் கீழ்நுனிகள் தந்தை வர்க்கத்தில் பெண் வகையினரைக் குறிக்கின்றன.

| தந்தை | தாத்தா | பாட்டனார் |
|---|---|---|
| \| | \| | \| |
| தாய் | பாட்டி (தந்தையின் தாய்) | முப்பாட்டி (தந்தையின் பாட்டி) |

2. மேற்கண்ட மூன்று தர்ப்பைகளின் குறுக்கே மேலும் மூன்று தர்ப்பைகளை இணையாகப் பரப்பவேண்டும். இந்த தர்ப்பைகளின் வலது நுனிகள் தாய் வர்க்கத்தில் ஆண் வகையினரையும் இடது நுனிகள் தாய் வர்க்கத்தில் பெண் வகையினரையும் குறிக்கின்றன.

| | | |
|---|---|---|
| (தாயின் தாய்) பாட்டி | ———— | தாத்தா (தாயின் தந்தை) |
| (தாயின் பாட்டி) முப்பாட்டி | ———— | பாட்டனார் (தாயின் தாத்தா) |
| (தாயின் முப்பாட்டி பாட்டியின் அம்மா) கொள்ளுப்பாட்டி | ———— | முப்பாட்டனார் (தாயின் பாட்டனார் – தாத்தாவின் அப்பா) |

## தர்ப்பைச்சட்டத்தின் பூரணநிலை

மேற்குறித்த முறையில் நேராகவும், குறுக்காகவும் தர்ப்பைகளை அமைத்தபின் படத்தில் கீழே கண்டவாறு தர்ப்பைச்சட்டம் அமையும்.

தந்தை தாத்தா பாட்டனார்

பாட்டி (தாயின் தாய்) — தாத்தா (தாயின் தந்தை)

முப்பாட்டி (தாயின் பாட்டி) — பாட்டனார் (தாயின் தாத்தா)

(தாயின் கொள்ளுப் பாட்டி) முப்பாட்டி — முப் பாட்டனார் (தாயின் பாட்டனார்)

தாய் பாட்டி (தந்தையின் தாய்) முப்பாட்டி (தந்தையின் பாட்டி)

இவ்வாறாக ஆறு கட்டை தர்ப்பைகளை நேராகவும், குறுக்காகவும், அமைத்து 12 தர்ப்பை நுனிகளில் எள் கலந்த நீரை, அந்தந்த மூதாதையரின் பெயரைச் சொல்லி ஊற்றுதலே எளிமையான தர்ப்பண பூஜை முறையாகும்.

## தர்ப்பணமிடும்போது கடைப்பிடிக்கவேண்டிய விதிமுறைகள்

முதலில் நன்றாக நீராடி, உலர்ந்த ஆடை அணிந்து நெற்றியில் அவரவர் குல வழக்கத்திற்கேற்ப இறைச் சின்னங்களைத் தரித்தபின் கிழக்கு/ வடக்கு நோக்கி தர்ப்பைப்பாய்/துணிவிரிப்பின் மேல் பத்மாசனமிட்டு அமர்ந்துகொள்ள வேண்டும்

2. வலது கை மோதிர விரலில் தர்ப்பைப்புல்லால் செய்யப்பட்ட பவித்திரம் அணிவது சிறந்தது.

3. மந்திரங்களைத் தெளிவாக உச்சரித்தபடியே வலது கை உள்ளங்கையில் எள்ளை வைத்து, மூதாதையரின் பெயர் மற்றும் கோத்திரத்தைக் கூறிய பின்னர் *தர்ப்பயாமி தர்ப்பயாமி தர்ப்பயாமி* என மூன்று முறை நீர் வார்த்து எள் கலந்த நீரானது வலது கை கட்டைவிரல், ஆட்காட்டி விரலுக்கிடையே உள்ள பகுதி வழியே தர்ப்பை நுனிகளில் வந்து விழும்படி கையைச் சற்றே சாய்க்க வேண்டும். இவ்வாறு ஒவ்வொரு மூதாதையருக்கும் செய்ய வேண்டும்.

4. மேற்கூறிய முறையில் தர்ப்பணம் அளித்தபின்னர் பவித்திரத்தை மெதுவாகப் பிரித்து அதனுடன் மற்ற தர்ப்பைகள், எள், நீர் போன்றவற்றைக் கீழே சிந்தாமல் கவனமாக ஆற்று நீரிலோ, குளம் அல்லது கிணற்று நீரிலோ சேர்த்து விடவேண்டும். இதனை உடனடியாக நிறைவேற்றும் வாய்ப்பு இல்லாதோர் ஒரு பாத்திரத்தில் கவனமாக சேர்த்து வைத்திருந்து பின்னர் கொண்டு போய் சேர்க்கலாம்.

(எள் தானிய மணிகளைக் கீழே மண்தரையில் போட்டுவிட்டால் அவை மீண்டும் முளைத்து செடிகளாகி விடும். அதற்கு வாய்ப்பு இல்லாதபடி நீர் அதிகம் உள்ள நதிகள், கிணறுகளில் சேர்ப்பது நல்லது)

**போகர்:** தர்ப்பணம் இடும்போது சொல்லவேண்டிய மந்திரங்கள் ஏதேனும் உண்டா குருதேவா?

**அகத்தியர்:** நிறைய உண்டு, எனதருமை போகா! சற்குருவை முறையாக நாடி வேண்டுவோர்க்கே அவை அருளப்பெறும். இருப்பினும், அனைத்து மக்களும் கடை பிடிக்க எளிமையானதோர் மந்திரத்தை அளிக்கின்றேன்.

எள்கலந்த நீரை தர்ப்பை நுனியில் ஊற்றும்போது

ஊர்ஜம் வஹந்தீ: அம்ருதம் க்ருதம் பய: கீலாலம்
பரிஸ்ருதம் ஸ்வதாஸ்த தர்ப்பயத மே பித்ருன்
த்ருப்யத த்ருப்யத த்ருப்யத

*(அல்லது)*

மெய்யில் விளங்கும் சோதி, மெய்யுணர்ந்த
மேல் நீத்தார் மனங்குளிர வார்த்த எள்நீர் ஏற்று
மனங்குளிர்வீர் மனங்குளிர்வீர் மனங்குளிர்வீரே

*– (அகஸ்தியர் நீத்தார்கடன் படலம்)*

என்று சொல்லி வலது கையினை விரித்துக் கட்டைவிரல், ஆள்காட்டி விரல்களுக்கிடையே உள்ள வழியாக தீர்த்தத்தை எள்ளுடன் சேர்த்து தர்ப்பை நுனியின் மேல் இடவேண்டும். இதுவே தர்ப்பண மந்திரத்தின் முக்கியப்பகுதி.

**போகர்:** குருதேவா! தர்ப்பண மந்திரங்கள் தேவமொழியில் (சமஸ்கிருதம்) உள்ளனவே என்று அம்மொழியை அறியாத சிலர் கருதுகின்றனரே!

**அகத்தியர்:** அறியாமை காரணமாக மக்கள் மனதில் உண்டாகும் குழப்பமே இது! உண்மையில் மந்திரங்கள் எவையும் எந்த மொழியிலும் உருவாக்கப்படவில்லை. ***வேதங்கள் அனைத்தும் இறைவனின் படைப்பே!*** அத்தகைய தெய்வீக சப்த ஒலி அணுக்களை, சக்தி மிக்க பீஜாட்சரங்களை சங்கேதக் குறியில் வடிவமைத்துத் தந்துள்ளனர் மஹரிஷிகளும், மஹான்களும்.

வேத மந்திரங்கள் இறைவனின் வாக்கு என்பதால் அவற்றை அப்படியே எடுத்துரைத்தால் அதன் சக்தி பல்கிப் பெருகும். எனவே பொருள் புரியாவிட்டாலும் மந்திரங்களை அப்படியே உச்சரித்தால் அதில் பொதிந்துள்ள பீஜாட்சரங்களின் முழு தெய்வீக சக்தியைப் பரிபூரணமாகப் பெறலாம்.

தேவமொழியில் (சமஸ்கிருதத்தில்) அமைந்துள்ள தர்ப்பண மந்திரங்கள் மட்டுமல்லாது அனைத்து மந்திரங் களுக்கும் இணையான தமிழ் மறைப்பாடல்கள் (தேவாரம், திருவாசகம் முதலியன) உண்டு. தக்க சற்குருவை நாடுவார்க்கே அவை அருளப்பெறும்.

**புலிப்பாணி:** குருதேவா! மன்னிக்க வேண்டும். இறந்த பெரியோர்களின் பெயர் தெரியாதோர் எவ்வாறு தர்ப்பணம் இடவேண்டும் என்பதை விளக்க வேண்டுகிறோம்.

**அகத்தியர்:** ஒவ்வொரு மனிதனும் தன்குடும்பப் பெரியார்களிடம் விசாரித்து முதலில் 12 மூதாதையர்களின் பெயரைத் தெரிந்து கொள்வது அவசியம். அவ்வாறு பெயர் தெரியாவிடில் அவர்களின் நினைவு அவசியமாகும். உருவத்தைப் பார்த்திராமல், பெயரும் தெரியாவிடில் தாத்தா, பாட்டி, கொள்ளுப்பாட்டி என்று உறவினையாவது நினைவு கூர்தல் வேண்டும்.

**போகர்:** சிலர் தர்ப்பணம் இடும்போது கோத்திரத்தைக் குறிப்பிடுகின்றனரே, குருதேவா!

**அகத்தியர்:** கோத்திரத்தினைக் குறிப்பிட்டு தர்ப்பணம் அளிப்பதும் சிறப்புடையதே. கோத்திரம் என்றால் 64 வகையான கோத்திராதிபதிகள் உண்டு. கௌதமர், பாரத்வாஜர், ஆங்கிரேஸர் என்றவாறாக **64 முக்கியமான ரிஷிகளின் வழித்தோன்றல்களே இன்று உலகெங்கும் பல நாடுகளில் பல மதங்களைச் சார்ந்து உலக மக்களாக வாழ்கின்றனர்.** கோத்ர ரிஷிகள் ஜாதி, மத, இன, மொழி பேதமின்றி அனைவருக்கும் உண்டு! அவரவர் குடும்ப சம்பிரதாயத்திற்கேற்ப கோத்திரம் மாறுபடும்.

**போகர்:** கோத்திரம் அறியாதோர் என்ன செய்வது ஐயனே!

**அகத்தியர்:** கோத்திரம் அறிய சற்குருவை நாடவேண்டும். ***அனைத்தும் அறிந்தவர் சற்குரு ஒருவரே!*** சற்குரு கிட்டும்வரை சிவகோத்திரம், விஷ்ணு கோத்திரம் போன்ற ஒன்றை அவரவர் குல வழக்கத்திற்கேற்ப வைத்துக்கொள்வது ஏற்புடையதே.

**போகர்:** அமாவாசை, மாதப்பிறப்பு போன்ற விசேஷ தினங்களில் தர்ப்பணம் செய்வதன் காரணம் என்ன, குருதேவா?

**அகத்தியர்:** (சிரித்துக் கொண்டே) நீ அறியாமையால் கேட்பதால் கேள்வியே தவறு! உண்மையில் தர்ப்பணம் என்பது மனிதனின் நித்ய பூஜைகளில் முக்கிய இடம் பெற்றுள்ளது. அமாவாசையில் மட்டும் செய்வதன்று. காலப்போக்கில் மக்களின் அலட்சியப் போக்கின் காரணமாக 'அமாவாசைக்கு அமாவாசை' என்ற நிலை ஏற்பட்டு விட்டது.

எனவே ஒவ்வொரு மனிதனும் தினந்தோறும் காலையில் தன் மூதாதையர்களை நன்றியுடன் நினைவு கூர்ந்து தர்ப்பணமிடவேண்டும். அதுமட்டுமின்றி அமாவாசை, மாதப்பிறப்பு, சூரிய, சந்திர கிரஹணங்கள், ஒவ்வொரு மாதமும் வருகின்ற மூதாதையரின் திதி போன்ற நாட்களில் கட்டாயமாக பித்ரு தர்ப்பணம் செய்தே ஆக வேண்டும்.

**போகர்:** பித்ரு தர்ப்பணங்களைப் புனித நதி தீரங்களில் செய்வதன் காரணம் என்ன குருதேவா?

**அகத்தியர்:** இறந்த மூதாதையர்களிலும் மிக உயர்ந்த ஆன்மீக நிலை கொண்டோரே பித்ருக்கள் என்னும் உயர்ந்த நிலையை எய்துகின்றனர். புனிதமான, ஒளிமயமான, சூட்சும தேகம் உடைய அவர்கள் பூலோகத்திற்கு வரும்போது புண்யசக்தி, தெய்வசக்தி

மிகுந்த இடங்களில்தான் தங்கமுடியும். அத்தகைய இடங்கள்தாம் கோயில் தலங்கள், அரசு, ஆல், வேம்பு போன்ற புனித விருட்சங்கள், சமுத்திரம், புனித நதி தீரங்கள் போன்றவை. எனவேதான் இத்தகைய இடங்களில் தர்ப்பணமிடுதல் பித்ருக்களுடைய ஆசிகளை அபரிமிதமாகப் பெற்றுத்தரும்.

**போகர்:** அப்படியெனில் வீடுகளில் தர்ப்பண பூஜையினை நிகழ்த்துவது தவறா குருதேவா?

**அகத்தியர்:** இயன்றவரை புனிதமான தலங்களில் தர்ப்பண பூஜையினை நிகழ்த்துவதுதான் உத்தமம். இல்லங்களில் பொதுவாக பித்ருக்கள் தங்குவதில்லை. காரணம், அவர்களது ஜோதிஸ்வரூப தேகம் தங்குமளவிற்குப் புனிதமான சூழ்நிலை இல்லங்களில் இருப்பதில்லை.

பித்ருக்கள் தங்குவதற்கான தெய்வீகச் சூழ்நிலைகளை அமைத்துத்தரும் முயற்சியாகவே, புனித தினங்களில்

1. வீடுகளைக் கழுவிக் கோலமிடுதல்

2. வீடு முழுவதும் அடர்த்தியான சாம்பிராணி தூபப்புகை இடுதல்

3. தெய்வப் படங்களைத் துடைத்து மஞ்சள், சந்தனம், குங்குமமிடுதல் போன்றவை விதிக்கப்பட்டுள்ளன. அமாவாசையன்று பூஜையில் யானைத்தந்தம், தந்தத்திலான பொருட்கள், சந்தனக்கல், சந்தனக் கட்டை, ருத்ராட்சம், ஸ்படிகம், மஞ்சள், துளஸி, வில்வம், மஞ்சள் பூசிய தேங்காய் சுத்தம் செய்து வைத்தால் அவற்றில் பித்ருக்கள் எழுந்தருளி ஆசீர்வதிக்கின்றனர்.

**புலிப்பாணி:** தர்ப்பண பூஜைகளை நிகழ்த்த விசேஷமான ஸ்தலங்களை அறிய ஆவலாயுள்ளோம், குருதேவா!

**அகத்தியர்:** தர்ப்பண பூஜை மட்டுமல்ல, என் சீடனே! ***எந்த ஓர் நற்காரியம் செய்ய வேண்டுமென்றாலும் அதற்கு ஏற்ற முதலிடம் திரு அண்ணாமலையே!*** திருஅண்ணாமலையில் செய்யப்படும் தான தர்மங்கள், ஹோமம், யாகம், பூஜைகள், தர்ப்பணம் போன்ற எந்த நற்காரியங்களுக்கும் ஆயிரம் மடங்கு பலன் உண்டு.

தவிர இராமேஸ்வரம், தனுஷ்கோடி, கும்பகோணம் சக்கரப்படித்துறை, திருவிடைமருதூர், திருவள்ளூர் வீரராகவசுவாமி திருக்கோயில் ஸ்ரீ சூரிய நாராயண ஸ்வாமி எழுந்தருளியுள்ள தலங்கள், சூரியனார் கோயில் போன்ற கிரகங்களுக்குத் தனிச் சன்னதி உள்ள கோயில்கள், வட இந்தியாவில் வாரணாசி, கயா போன்ற ஸ்தலங்களிலும் கங்கை, காவேரி போன்ற புனித நதி தீரங்களிலும் மஹான்கள், யோகியரின் ஜீவ சமாதிகளிலும் தர்ப்பண பூஜையை நிகழ்த்துவது அபரிமிதமான பலன்களைப் பெற்றுத் தரும்.

**போகர்:** தர்ப்பணத்தின் வகைகளை அறிய ஆவலாக உள்ளோம் குருதேவா!

**அகத்தியர்:** தர்ப்பணம் என்றால் 'இறந்தவர்களுக்கு மட்டும் அளிப்பது' என்று சிலர் தவறாகப் புரிந்து கொண்டுள்ளனர். ***தர்ப்பணம் என்றால் 'திருப்தி அளிப்பது' என்று பொருள்.*** பித்ரு தர்ப்பணம் தவிர தேவதர்ப்பணம், ரிஷி தர்ப்பணம், பிரம்ம தர்ப்பணம் என்றவாறு பல வகைகள் உண்டு.

பித்ருக்களுக்கு செய்யும் தர்ப்பணத்தில் வலது உள்ளங்கை ஓரத்தில் கட்டைவிரல், ஆள்காட்டி விரலுக் கிடையே எள் கலந்த நீரை வார்த்துத் தர்ப்பணமிடல் வேண்டும். கங்கை, காவிரி போன்ற புண்ணிய தீர்த்தத்தினைச் சேர்த்தல் விஷேசமானதாகும்.

உத்தம ஆன்மீக நிலைய்யடைந்த ரிஷிகள், ஞானிகள், யோகிகள் போன்றோர்க்கு கங்கை, காவிரி போன்ற புண்ணிய தீர்த்தம் கலந்த நீரால் அல்லது துளசிதீர்த்தத்தால் (துளசி சேர்ந்த நீர்) வலது கை சுண்டு விரல் *வழியாக அர்க்யம்* விட வேண்டும். *இது ரிஷி தர்ப்பணமாகும்.*

தேவர்களுக்கு கங்கை, காவிரி போன்ற புண்ய தீர்த்தம் சேர்ந்த நீரை வலது *கையின் ஐந்து விரல்கள் வழியாக* அர்க்யமாக விடவேண்டும். *இது தேவ தர்ப்பண முறை.*

**புலிப்பாணி:** தர்ப்பணத்துக்கும், அர்க்யத்திற்கும் உள்ள வேறுபாடு என்ன, ஐயனே?

**அகத்தியர்:** *'அர்க்யம்' அளித்தல் என்றால் 'சமர்ப்பணம் செய்தல்' என்று பொருள்.* பொதுவாக தெய்வ மூர்த்திகளுக்கும், மஹரிஷிகளுக்கும், மஹான்கள், யோகிகளுக்கும் மற்ற உத்தம நிலையடைந்தோர்க்குமே அர்க்யம் அளிக்கப்படுகிறது.

**போகர்:** பிரம்மதர்ப்பணம் என்று சிலர் கூறுவது எவ்வகைத் தர்ப்பணத்தைக் குறிக்கிறது, குருதேவா?

**அகத்தியர்:** உள்ளங்கையின் மணிக்கட்டினை ஒட்டிய பகுதிக்கு *'பிரம்மஸ்தானம்'* என்று பெயர். உள்ளங் கையில் நீரெடுத்து உட்புறமாக மணிக்கட்டு வழியே நீரை அர்க்யமாக வார்த்தலுக்கு 'பிரம்மார்க்யம்' அல்லது *'பிரம்ம தர்ப்பணம்'* என்று பெயர்.

பிரம்மஸ்தானத்தில் பட்டு வரும் எந்த நீரும் புனித பிரம்மதீர்த்தமாக அமைந்து நம்மைப் புனிதப்படுத்தும் சக்தியைப் பெறுகிறது. இதன் காரணமாகவே சந்தியா வந்தன பூஜையில் 'கேசவா, நாராயணா, மாதவா' என்றும் 'அச்யுதா, அனந்தா, கோவிந்தா' என்றும் உள்ளங்கையில் நீரை ஊற்றிப் பிரசாதமாக அருந்துகிறோம். கோயில் தீர்த்தங்கள், புண்ணியநதி நீர் போன்றவற்றையும்

பிரம்மதீர்த்தமாகவே உள்ளங்கையில் ஏற்று அருந்துகிறோம்.

**போகர்:** 'தாய், தந்தையர் இருக்கும்போது பிள்ளைகள் எள்ளைத் தொடக்கூடாது; தர்ப்பணம் செய்யக் கூடாது' என்று ஓர் கருத்து நிலவுகிறது. அது சரியா, குருதேவா?

**அகத்தியர்:** அது மிகவும் தவறான கருத்து. பெற்றோர்கள் உயிரோடு இருக்கும்போதே பிரம்மச்சாரிகள் செய்ய வேண்டிய நித்ய பூஜைகளில் ஒன்றான பிரம்ம யக்ஞத்தில் தேவ, ரிஷி தர்ப்பண மந்திரங்கள் உண்டே! ஏன், தினசரி சந்தியா வந்தனத்திலும் யம வந்தனம், நவகிரஹ தர்ப்பண மந்திரங்கள் உள்ளனவே!

தற்காலத்தில் பெரியவர்களே சந்தியா வந்தனம், பிரம்ம யக்ஞம் போன்ற நித்திய கர்மங்களைச் செய்யாததால் அவர்களுக்கே மந்திரங்கள், சம்பிரதாயங் களெல்லாம் தெரியாமல் போய்விட்டது. தந்தைமார்களே இன்னமும் வருடக்கணக்காகப் புத்தகத்தைப் பார்த்துப் பூஜை செய்கின்ற அவலநிலைதானே எங்கும் காணப் படுகிறது! தாங்களும் எதையும் சரிவர கற்றுக் கொள்ளாமல், தன் சந்ததியினரையும் நற்காரியங்களில் ஈடுபடுத்தாமல் இருக்கும் இவர்கள் என்றுதான் உண்மையை உணர்ந்து உள்ளம் திருந்தி வாழ முயற்சிப்பார்களோ?

**புலிப்பாணி:** பெற்றோர்கள் உயிரோடு இருக்கையில் பிள்ளைகள் யாருக்குத் தர்ப்பணம் அளிக்கலாம், ஐயனே!

**அகத்தியர்:** இவ்வாறு விளக்கங்கள் கேட்டால்தானே அறிவு விருத்தியாகும்! அறியாமை விலகும்!

எந்த ஒரு இறந்த ஜீவனுக்கும் எவர் வேண்டுமானாலும் பித்ரு தர்ப்பணம் செய்யலாம். ஆனால்

**அவரவர் வழித்தோன்றல்கள் குறித்த தர்ப்பணங்களைச் செய்வார்களெனில் அது பரிபூரணமாக இருக்கும்.** இறந்தவர்களும் தங்களது வம்சாவழியினர் செய்யும் தர்ப்பண பூஜைமுறைகளையே மிகவும் விருப்பத்துடன் ஏற்கின்றனர். அவ்வாறு இறந்தவரின் வம்சத்தினர் யாரும் செய்யவில்லை யென்றால் மற்றவர்கள் அவர்கள் சார்பாக தர்ப்பண பூஜைகளைச் செய்யலாம்.

உதாரணமாக ஒரு கல்லூரி மாணவனோ அல்லது அலுவலக ஊழியரோ இறந்து விட்டார் என வைத்துக் கொள்வோம். இறந்தவருடைய குடும்பத்தில் தர்ப்பணம் செய்யும் வழக்கம் இல்லாவிடிலோ அல்லது அவரது குடும்பத்தினர் தர்ப்பண பூஜைகள் செய்வதில் ஆர்வம் காட்டவில்லை என்றாலோ, இறந்தவருக்கு வேண்டிய நண்பர்களோ, சக ஊழியர்களோ தர்ப்பணம் கொடுக்கலாம். இதில் தவறேதும் இல்லை.

**போகர்:** பலர் ஒன்றுகூடிச் செய்யும் கூட்டுத் தர்ப்பண முறைகள் ஏதேனும் உண்டா, ஐயனே!

**அகத்தியர்:** நிச்சயம் உண்டு. தனிப்பட்ட பூஜை, ஹோமத்தை விட பலர் ஒன்றாகச் சேர்ந்து செய்யும் கூட்டு வழிபாடு, கூட்டு நாம சங்கீர்த்தனம் போன்றவற்றிற்குப் பன்மடங்கு பலன் உண்டு.

ரயில், பஸ் விபத்து, பூகம்பம், புயல், வெள்ளம் போன்றவற்றில் இறப்போரின் ஆத்ம சாந்திக்காகப் பலர் ஒன்றுகூடி கூட்டுத் தர்ப்பண பூஜைகளைச் செய்வது மிகவும் சிறப்பானது. தற்காலத்தில் கூட்டுப் பிரார்த்தனை முறைகள் பிரபலமடைந்து விளங்குவதைப்போல், எதிர்காலத்தில் கூட்டுத் தர்ப்பண முறை மிகவும் பிரசித்தி பெறும்.

**போகர்:** தர்ப்பண மந்திரங்களை அறியாதோர் பிறர் உதவியுடன் தர்ப்பண பூஜைகளைச் செய்வது ஏற்புடையதா, குருதேவா?

**அகத்தியர்:** உண்மையான உள்ளத்துடன் எவ்வித ***சுயலாபத்தையும் எதிர்பாராமல்*** கட்டணம் பெறாமல் தர்ப்பணம் செய்து வைப்போரின் உதவியை நாடுவதில் தவறில்லை. ஆனால் அத்தகைய புனித உள்ளம் உடையோர் இக்காலத்தில் கிடைப்பது அரிது. (கட்டணம் பெற்றால் மந்திரத்தை விற்பது போலாகும். நாமாக விரும்பி தானமாக அளிப்பதில் தவறில்லை.)

அவ்வாறு தர்ப்பணம் செய்து வைப்போருக்குச் சில ஆன்மீக தகுதிகள் விதிக்கப்பட்டு இருக்கின்றன. அவர்கள் தினந்தோறும் 1. குறைந்தது 10,000 முறையாவது காயத்ரி மந்திரம் ஜபிக்க வேண்டும். 2. சந்தியா வந்தனம் போன்ற நித்திய கர்மாக்களை மூன்று வேளையும் தவறாமல் சிரத்தையுடன் செய்ய வேண்டும். 3. தீட்சை வைத்து, (குடுமி) பஞ்சகச்ச ஆடை அணிபவராயிருக்க வேண்டும்.

இத்தகைய தகுதிகளை பூண்டவரைத் தேடி பிடிப்பது மிகவும் கடினம். எனவே அத்தகையோர் கிடைக்காவிடில் ***சுயமாக தர்ப்பண பூஜை செய்வதே சிறப்பானது.***

**போகர்:** குருதேவா! தாங்கள் மேலே குறிப்பிட்ட ஆன்மீகத் தகுதிகள் தர்ப்பணம் செய்து வைப்பவருக்குத் தான் பொருந்துமா?

**அகத்தியர்:** அப்படியல்ல, எனதருமை போகா! சுயமாகத் தர்ப்பண பூஜை செய்பவருக்கும் இத்தகுதிகள் பொருந்தும். ஆனால் நமக்கே அத்தகுதிகள் இல்லையே என்று மனதார உணர்ந்தால் ஆன்மீகத்தில் நெறிமுறைகளுடன் வாழ முயற்சிப்போம். சுலபமான எளிய மந்திரங்களில் துவங்கி ஆர்வத்துடன் செய்பவருக்கு

நாளடைவில் ஆழ்ந்த ஈடுபாடு தானாகவே உருவாகிறது. எனவே உள்ளத்தூய்மையோடு பித்ரு பூஜை மட்டுமல்லாது அனைத்து இறைக்காரியங்களையும் ஆர்வத்துடன் செய்யும் பாங்கு வந்தடைகிறது.

பிறர் செய்து வைத்தாலோ, ஏனோதானோவென்று வாழ்க்கை முழுவதும் அப்படியே கழிந்து விடும். மேலும் சுயமாகத் தர்ப்பண பூஜை செய்யும்போது, பித்ருக்கள் பூஜைகளில் உள்ள குறைகளை கூடப் பொருட்படுத்தாமல் மனதார ஏற்று ஆனந்தத்துடன் ஆசீர்வதிக்கின்றனர்.

புலிப்பாணி: குருவே! ஆண்வாரிசுகளே இல்லாத குடும்பங்களில் தர்ப்பண பூஜைகளை யார் செய்வது?

அகத்தியர்: நன்று கேட்டாய் புலிப்பாணி! **ஆண்துணை இல்லாக் குடும்பங்களில் பெண்கள் தர்ப்பணம் இடலாம்.** இதில் சிறிதளவும் சந்தேகம் வேண்டாம். (ஆனால் இந்த ஸ்திரீ தர்ப்பண முறையில் சில விசேஷப் பிரயோக முறைகள் உண்டு. தக்க சற்குருவை நாடி விளக்கம் பெறவும்.)

1. கணவனை இழந்து தனித்தோ, குடும்பத்துடனோ ஆண் துணையின்றி வாழ்கின்ற பெண்கள், தங்கள் கணவன்மார்களுக்காகவும்,

2. கணவனை விட்டுப்பிரிந்து வாழ்கின்ற பெண்கள், கணவர்களிடமிருந்து எவ்வித உதவியும் இல்லாத நிலையில் இறந்த தன் தாய், தந்தையருக்காகவும்,

3. ஆண்துணையற்ற எந்தப் பெண்ணும், தன்னை ஆதரித்துக் காப்பாற்றிப் பின் இறந்துபோன எவருக்கும் நன்றிக்கடனாவும் (காருண்ய பித்ரு தர்ப்பணம்) பித்ரு தர்ப்பண பூஜைகளைச் செய்யலாம்.

மேற்கூறியவை தவிர, எந்த ஒரு பெண்ணும் இறந்த தன் கணவனுக்கும், இறந்த தன் ஆண், பெண்

பிள்ளைகளுக்கும் (கணவனும் உயிருடன் இல்லாத பட்சத்தில்) தர்ப்பணம் இடலாம்.

**போகர்:** சில குடும்பங்களில் கணவன்மார்கள் பூஜை முறைகளைச் சரிவரக் கடைப்பிடிப்பதில்லை. அப்படிப் பட்ட குடும்பங்களில் மனைவிமார்கள் தர்ப்பணம் செய்வது சரியா, குருதேவா?

**அகத்தியர்:** நம்பிக்கையின்மை காரணமாகவோ, அலட்சிய மனப்பாங்குடனோ கணவன் பித்ரு தர்ப்பணங் களைச் செய்யாவிடில் மனைவியே அதனை ஏற்றுச் செய்யலாம். இதில் தவறேதுமில்லை. ஆனால் அவ்வாறு செய்வதற்குமுன் கணவனது முன் அனுமதியினைப் பெற்றுப் பின்னர் மனைவிமார்கள் தர்ப்பண பூஜைகளைச் செய்தால் பரிபூரண பலன்கள் கிட்டும்.

**போகர்:** குருதேவா! ஸ்திரீ தர்ப்பண முறையினைச் சற்று விளக்க வேண்டுகிறோம்.

**அகத்தியர்:** வெற்றிலையில் ஆண் வெற்றிலை, பெண் வெற்றிலை என இரு வகைகள் உண்டு. ஆண் வெற்றிலையில் நரம்புகள் நிறைந்தும், பெண் வெற்றிலையில் நரம்புகள் குறைவாகவும் காணப்படும். வெற்றிலை மூலிகைக்கும், பித்ரு லோகத்துக்கும் நெருங்கிய தொடர்புண்டு.

ஓர் ஆண் வெற்றிலையை நன்கு சுத்தப்படுத்தி அதில் நன்கு அரைத்த மஞ்சளைப் பிடித்து வைத்து, கூம்புபோல் அமைக்க வேண்டும். கணவன், பிள்ளை, பெண், காருண்ய பித்ரு இவர்களில் யாருக்குத் தர்ப்பணமோ அவர்களுடைய பெயரை தியானித்து மஞ்சள் கூம்பில் பித்ரு ரூபத்தில் எழுந்தருளும்படி வேண்ட வேண்டும்.

பிறகு இந்த மஞ்சள் பித்ரு பிம்பத்திற்குமுன் ஆறு தர்ப்பைகளைக் கொண்டு தர்ப்பைச் சட்டம் அமைத்து

மேலே ஏற்கனவே குறிப்பிட்ட முறையில் வெள்ளை எள் கலந்த நீரை வார்த்துத் தர்ப்பணமிடவேண்டும். பெண்கள் இம்முறையில் தர்ப்பணம் அளித்தால் தர்ப்பணத்தின் பலன்கள் சிறந்த ஆசீர்வாதங்களாக மாறி பல வாழ்க்கைப் பிரச்னைகளைத் தீர்க்கின்றன.

**போகர்:** வெள்ளை எள்ளா? ஏன், குருதேவா?

**அகத்தியர்:** பெண்கள் வெள்ளை எள் கொண்டு தான் நீர் வார்த்துத் தர்ப்பணமிடல் வேண்டும். எள் வகையில் வெள்ளை எள் பெண் ஜாதி ஆகும். தர்ப்பண பூஜைகளில் ஆண்களுக்குக் கருப்பு எள்ளும், பெண்களுக்கு வெள்ளை எள்ளும் விதிக்கப்பட்டுள்ளது.

**போகர்:** வெள்ளை எள்ளின் சிறப்பினை அறிய ஆவலாய் உள்ளோம், ஐயனே!

**அகத்தியர்:** ஒரு குறிப்பிட்ட யுகத்தில் மைத்ரேயி, கார்க்கி, அனுசுயா போன்ற உத்தமப் பத்தினிகள் பெண்களுக்கு உரித்தான வேதங்களைப் புகட்டி வேத தர்மத்தினை நிலைபெறச் செய்தனர். அக்கால கட்டத்தில் எல்லாத்துறைகளிலும் பெண்களே சிறந்து விளங்கினர். அந்த அபூர்வமான யுகத்தில் ஓர் அற்புதமான புராணச் சம்பவமும் நடந்தது.

சூரியபகவானின் மைந்தர்களான சனீஸ்வர மூர்த்தியும், எமதர்ம ராஜனும் ஈஸ்வரப் பட்டம் பெற வேண்டும் எனப் பேராவல் கொண்டு பல அரிய தவங்களை மேற்கொண்டனர். இறைவனின் திருவிளையாடலாக இருவருக்கும் இடையே ஏற்பட்ட பிணக்கில் எமதர்மராஜன் தனது தண்டால் அடித்துவிட சனீஸ்வரமூர்த்தியின் கால் ஊனமானது.

ஊனமுற்ற சனீஸ்வரர் அதுவரை தாம் மேற்கொண்ட தபோபலனைக் கொண்டுத் தன் காலை சரி செய்து,

கொள்ள முடியும். எனினும் 'இதுவும் இறைவனின் விருப்பமே' எனத் தெளிந்து மீண்டும் தவத்தை மேற்கொண்டார்.

அவருக்கு ஸ்ரீ சிவபெருமான் தரிசனம் அளித்து ஸ்ரீஅம்பிகையின் அருளைப் பெற்றாலன்றி எவ்வித ஆன்மீக நிலையையும் எவருமே பெற இயலாது என உணர்த்த, சனீஸ்வரமூர்த்தியும் பல அம்பிகைத் தலங்களுக்குச் சென்று அற்புத இறைப்பணி ஆற்றி வந்தார். மூர்த்தி – தீர்த்தம் – தலம் என்றவாறாக அவர் முறையாக செய்த தரிசனங்களின் பலனால் ஸ்ரீ அம்பிகை அவருக்குக் காட்சியளித்து 'சனீஸ்வரா! ஏற்கனவே நீ நிறைய தபோபலன்களைப் பெற்றுவிட்டாய். மேலும் தவம் செய்வதை விட நீ பெற்றுள்ள தவசக்தியைக் கொண்டு பல அரிய இறைக்காரியங்களை நிறைவேற்றினால், தவசக்தி பெருகுவதோடு பலன்களும் எளிதில் ஈஸ்வர அனுக்ரஹமாக மாறும்' என ஆசீர்வதித்தனள்.

மேலும், 'இதற்குப் பிறகு வரும் யுகங்களில் வேதநெறிகள் மங்கி ஹோம, வேள்வி, பூஜை முறைகள் நலிவடையும். ஜீவன்களில் பெரும்பாலோர் பெண்களாக இருப்பதால் சந்ததிகளின்றிப் பல குடும்பங்கள் வாடும். அச்சூழ்நிலையில் பெண்களுடைய பித்ரு பூஜையே ஆண்–பெண் ஜீவநிலையைத் தார்மீக முறையில் விகிதப்படுத்தப்படும்.

எனவே பித்ரு லோகங்களின் நாயகரான ஸ்ரீ விஷ்ணுவின் பாதங்களில் உன் தபோசக்தியை சமர்ப்பித்து, பெண்களுக்கான பித்ரு பூஜையைப் பல லோகங்களிலும் பரப்புவாயாக!' என அருளினார்.

பராசக்தியின் அருளாணைப்படி சனீஸ்வரர் ஸ்ரீவிஷ்ணுவின் பாதம் பணிந்தார். அடுத்தகணம்

விஷ்ணுலோகத்தில் அவரை அனைத்து மகரிஷிகளும் யோகிகளும் ஆனந்தமாக வரவேற்றனர். ஊனமுற்ற தமக்கு ஸ்ரீவிஷ்ணு லோக தரிசனம் எளிதில் கிடைத்ததை எண்ணி எண்ணி வியந்தார் ஸ்ரீ சனீஸ்வர பகவான். ஸ்ரீ நாரத மகரிஷியும், 'ஸ்ரீ சனீஸ்வரா! உன்னுடைய தவவலிமை காரணமாக விஷ்ணுலோக தரிசனம் கிட்டியது என எண்ணவேண்டாம். உன் தவப்பலனை ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் பாதார விந்தங்களில் சமர்ப்பிக்க வந்துள்ளாயே அந்த சரணாகதி மனப்பான்மையே காரணம். **குருஅருளால்தான் திருஅருளைப் பெறலாம்.** சாட்சாத் அம்பிகையே உனக்கு குருவாய் அமைந்து விஷ்ணுவின் திருஅருளைப் பெற்றுத் தந்து விட்டாள். நம்பிக்கை, சரணாகதி, தியாகம் இவையே குருஅருள் கூட்டும் முப்பெரும்நிலை!' என விளக்கினார்.

சனீஸ்வர மூர்த்தியும், ஸ்ரீ விஷ்ணுவின் திருப்பாதங்களில் தம் தபோபலனைக் காணிக்கையாக அர்க்யம் வார்த்து அளித்திட, ஸ்ரீ விஷ்ணு பகவான் அதனை ஏற்று, அந்நீர்த்துளிகளைத் தமது இடது கண்ணில் பூசிக் கொண்டார். அந்நீர்த்துளிகளே முதல் வெள்ளை எள் தானியங்களாக மலர்ந்தன!

'சனீஸ்வரா! இனிவரும் காலங்களில் பெண்கள் வெள்ளை எள் கொண்டு தர்ப்பணம் செய்வார்களாக! அவ்வாறு செய்யும் பெண்களுக்கு சனீஸ்வர மூர்த்தியாம் உன் அருளோடு, விஷ்ணுலோகத்தில் வசிக்கும் பித்ருக்களின் தரிசனமும், அருளாசியும் கிடைக்கும்!" என ஸ்ரீவிஷ்ணுபகவான் திருவாய் மலர்ந்தருளினார்.

**போகர்:** பெண்கள் வெள்ளை எள் கொண்டு தர்ப்பணமிட வேண்டும் என்று தாங்கள் கூறியதற்கு இவ்வளவு பெரிய ஆன்மீகப் பின்னணி உள்ளதா! கேட்கவே வியப்பாக இருக்கிறதே மஹாதேவா!

**அகத்தியர்:** இதுமட்டமல்ல போகா, இவ்வுலகில் நடக்கும் ஒவ்வொரு காரியத்துக்கும் காரணம் உண்டு. எம்பெருமான் இறைவனின் படைப்பில் ஒரு சிறு இலைகூட காரண, காரியமின்றி அசைவதில்லை. **'நடப்பது அனைத்திற்கும் பின்னால் ஒரு காரணம் உண்டு'** என்ற உண்மையை மனதில் உருவேற்றி வந்தால் போதும்; மனிதன் தன் வாழ்வில் அனைத்து ஏற்றத் தாழ்வுகளையும் அணுஅளவு கூட மனக்கிலேசமின்றிச் சந்திக்கலாம்.

**புலிப்பாணி:** குருதேவா! தாங்கள் மேலே குறிப்பிட்டவை தவிர வேறு ஏதேனும் விசேஷ தர்ப்பண முறைகள் இருந்தால் தெரியப்படுத்த வேண்டுகிறோம்.

**அகத்தியர்:** நிறைய உண்டு, எனதருமை புலிப்பாணி! நித்ய தர்ப்பணம், அமாவாசை, மாதப்பிறப்பு தர்ப்பணம் தவிர மாளயபட்ச தர்ப்பணம், ஆடி அமாவாசை போன்ற விசேஷ தினங்களில் தர்ப்பணம் ஆகியவை உண்டு.

இவை மட்டுமா! பிரம்மச்சாரிகள் செய்யவேண்டிய பீஷ்ம தர்ப்பணம், மகான்களுக்குச் செய்யவேண்டிய விஷ்ணுபிம்பத் தர்ப்பணம், மேலும் யமதர்ப்பணம், பலித்துருவ தர்ப்பணம் என்று சொல்லிக் கொண்டே போகலாம்.

**போகர்:** விசேஷ தினங்களில் செய்யும் தர்ப்பண முறைகளைப் பற்றி அறிய ஆசைப்படுகிறோம் குருதேவா! கருணை கூர்ந்து விளக்கவும்.

**அகத்தியர்:** அனைத்து விசேஷ நாட்களில் அளிக்கப்படும் தர்ப்பண பூஜைகளையும் விளக்கிக் கொண்டே போனால் அதற்கு எல்லையே கிடையாது. எனவே ஒரு சிலவற்றை மட்டும் விளக்குகிறேன்.

## ஆடி அமாவாசை:

பூவுலகில் ஒரு வருடம் எனப்படும் நேரமானது தேவலோகத்தில் ஒரு நாளாகக் கருதப்படுகிறது. அதாவது, தை மாதம் முதல் ஆனி வரை உள்ள ஆறு மாதங்கள் தேவர்களுக்குப் பகல் நேரம், ஆடி முதல் மார்கழி வரை உள்ள ஆறு மாத காலம் அவர்களுக்கு இரவு.

தேவர்கள் ஊன், உறக்கம், பசி போன்ற நிலைகளைக் கடந்தவர்கள் என்றாலும் இரவுப் பொழுதில் அதாவது ஆடி முதல் மார்கழி வரை அவர்கள் **'தேவதுயில்'** எனப்படும் தியான நிலையில் இருக்கின்றனர். அவ்வாறு தேவதுயிலுக்குச் செல்லுமுன் பூவுலகில் உள்ள நல்லோர்களை எண்ணி அவர்களின் நல்வாழ்விற்காக வேண்டுகின்றனர். அதுவும் ஆடி அமாவாசை தினத்தன்று அவர்களது பிரார்த்தனை உன்னதமடைகிறது.

***"ஆடி அமாவாசையில் நாடிப்பாரு நல்லோர்களையே!"*** எனவே ஆடி அமாவாசை தினத்தன்று வடமொழி/தமிழ் மறைகளை ***இலவசமாக*** கற்றுத்தருபவர்கள், ஊனமுற்றோர்/ நோயாளிகளுக்கு ***இலவசமாக*** மருத்துவம் செய்வோர், முதியோர்/ ஆதரவற்றோர்/ அனாதைகளுக்கு ***இலவசமாக*** சேவை செய்வோர் போன்றோரை வணங்கி அவர்களுக்குத் தேவையான உதவிகளைச் செய்வது சிறந்தது.

குழிபடல வழிபாடு: ஆடி அமாவாசை தினத்தன்று, மரணத்திற்குப் பிறகு புதைக்கப்பட்டவர்களின் சமாதிக்குச் சென்று வெல்லம், எள் கலந்த நீர் வார்த்து தர்ப்பணம் அளித்து உருளை, கேரட் போன்ற கிழங்கு வகை உணவுகளை தானமளிக்க வேண்டும்.

அவ்வாறு புதைக்கப்பட்ட இடத்திற்குச் செல்ல இயலாவிடில், அவர்களை மானசீகமாக வணங்கி

இறந்தவர்களுக்கு விருப்பமான உணவு வகைகளை தானமளித்தால், விண்ணுலகில் அவர்கள் நற்கதி பெறுவர். இவை தவிர பித்ரு தர்ப்பணங்களையும் ஆடி அமாவாசை தினத்தன்று முறையாகச் செய்யவேண்டும்.

மாளயபட்ச அமாவாசை

மால் + அயம் என்றால் திருமாலுக்கு உரித்தான அயன காலம் என்று பொருள். ***சகலகோடி பித்ருக்களின் நாயகரே ஸ்ரீ மஹாவிஷ்ணு*** ஆவார். புரட்டாசி மாதம் கிருஷ்ண பட்ச பிரதமை முதல் அமாவாசை வரை உள்ள பதினைந்து திதிகளே மாளயபட்சமாகும். ஸ்ரீ விஷ்ணுவுக்கு ப்ரீதியான இந்தப் பதினைந்து திதிகளிலும் தர்ப்பண பூஜைகளை முறைப்படி செய்வது சிறப்பானது.

மாளயபட்சத்தில் குறிப்பிட்ட திதிகளில் மட்டும் தர்ப்பணம் தரும் வழக்கம் நிலவுகிறது. இது தவறானது. பதினைந்து திதிகளிலும் தவறாமல் தர்ப்பண பூஜைகளைச் செய்தே ஆகவேண்டும்.

வருடத்தில் 365 நாட்களும் செய்ய வேண்டிய தர்ப்பணங்களைச் சரிவர செய்யாததற்கான பிராயசித்தமே இந்த மாளயபட்ச தர்ப்பண முறை. வருடத்தில் இந்தப் பதினைந்து நாட்களிலாவது முறையான தர்ப்பண, தான தருமங்களைச் செய்தால் இதுவரை தர்ப்பணங்களைச் செய்யாதுவிட்ட மாபெரும் பாவத்திற்கு ***ஓரளவு*** பிராயசித்தம் பெறலாம். ஆனால் அதன் பிறகு தவறாது தர்ப்பண பூஜைகளைச் செய்தல் வேண்டும். ***தவறுகளுக்கு பிராயசித்தம் என்பது வாழ்வில் ஒரு முறை மட்டுமே!***

யதிமாளயம்:

மாளய பட்ச துவாதசி திதியன்று அமைவதே யதிமாளய தினம். இந்நாளில் பெற்றோர்களுக்கு அவர்கள்

உயிரோடிருக்கையில், சேவை செய்யாதோர் அனாதை இல்லங்கள், முதியோர் இல்லத்தில் வசிப்போர், கவனிக்க யாருமில்லாத சூழ்நிலையில் இருப்பதால் முறையான தர்ப்பணங்களைச் செய்யும் வாய்ப்பு இல்லாமல் இருப்பர். அவர்களைக் கொண்டு தர்ப்பணம் செய்ய வைப்பதோ அல்லது அவர்கள் சார்பில் தர்ப்பணம் செய்வதோ மிகமிக சிறந்த காரியம்.

சரிவர கவனிக்காததால் பெற்றோர்கள் தங்கள் புதல்வர்களுக்கு இடும் சாபங்களுக்குப் பிராயசித்தமாக மேற்கூறிய நற்காரியங்களை நிறைவேற்றி சாபங்களிலிருந்து விடுபடலாம்.

## யமதீபதானம்

வீட்டில் யாராவது இறந்து போனால் இறந்தவரின் மறு உலக வாழ்வுக்காக, ஆவி பரிசுத்தமடையச் செய்ய வேண்டிய சடங்குகள், தானதர்ம நியதிகள் உண்டு. அவற்றை முறையாகக் கடைபிடிக்காவிடில் பித்ரு சாபங்களுக்கு உள்ளாகி கருக்கலைதல், சிசு நழுவுதல், வீட்டில் குழந்தைகள் காரண காரியமின்றி அடிக்கடி நோய் வாய்ப்படுதல், திடீர் பண இழப்பு, சிறு விபத்துக்கள் போன்றவை ஏற்படும்.

இவற்றுக்குப் பிராயசித்தமாக 'யமதீபதான' விசேஷ தினத்தன்று ஆற்றங்கரையில் வாழை/தாமரை இலையில் பசு நெய்/நல்லெண்ணெய் (அகல்) தீபம் ஏற்றி எள் சாதம், வாழைக்காய் கலந்த உணவு, பிரண்டைத் துவையல், அதிரசம், எள் உருண்டை போன்றவற்றை ஸ்ரீ எமதர்ம ராஜாவிற்கு படைத்து வணங்க வேண்டும். வாழை/தாமரை இலையில் உள்ள தீபங்களை இலையுடன் ஆற்றில் விட்டுவிட வேண்டும். நைவேத்யப் பொருட்களை அன்னதானமாக வழங்கிவிட வேண்டும்.

திருச்சி அருகே உள்ள திருப்பைஞ்ஞீலி சிவாலயம், சென்னை வேளச்சேரி ஸ்ரீ தண்டீஸ்வரர் சிவன்கோவில், திருக்கடவூர் சிவன் கோவில் போன்ற ஸ்ரீ எமதர்ம ராஜாவுக்குரிய தலங்களிலும் இப்பூஜையினை நிகழ்த்துவது மிகவும் சிறப்பானது. இந்நன்னாளில் இத்தலங்களில் ஆலயம் முழுவதும் நல்லெண்ணெய்/ பசு நெய் தீபமேற்றி வழிபட வேண்டும்.

## யமதர்ப்பணம்

ஐப்பசி மாதம், தீபாவளிப் பண்டிகையை ஒட்டி வருகின்ற அமாவாசை தினத்தன்று எமதர்பணம் அமைகின்றது. ஸ்ரீ மார்கண்டேய புராணத்தில் திருக்கடவூர் திருதலத்தில் சிவபெருனால் தண்டிக்கப்பட்ட ஸ்ரீ தர்மராஜா தாம் அறம் தவறியதை எண்ணி சொல்லொணாத் துயருற்றுப் பிராணனை விட்டார். அறக்கடவுளில்லாமையால் பிரபஞ்சத்தில் மரண நிலைகள் ஸ்தம்பித்து ஜீவன்களின் பெருக்கம் கட்டுக்கடங்காது போயிற்று. எனவே எம்பெருமான் சிவபெருமானின் ஆணைப்படி, சித்தர்களும் மகரிஷிகளும் ஸ்ரீ தர்மராஜாவின் சூட்சும சரீரத்திற்கான எமதர்ப்பண பூஜைகளைச் செய்திட சென்னை வேளச்சேரி தண்டீஸ்வரர் ஆலயத்தில் அறக்கடவுள் மீண்டும் அவதாரம் பெற்றுத்தனி தண்டத்தையும் பெற்றார்.

இந்நாளில் மேலே குறிப்பிட்டுள்ள ஸ்ரீ தர்மராஜா எழுந்தருளிய தலங்களில் தர்ப்பண பூஜைகளைச் செய்திட 1. எம பயம் அகலும். 2. பாயில் படுத்து நோயில் வாடாமல் இறைநாம ஸ்மரணத்துடன் கூடிய மரணம் ஏற்படும். 3. இறப்பு பிறப்பு பற்றிய ஞானம் உண்டாகும்.

பிறிதொரு யுகத்தில் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவால் சம்ஹரிக்கப்பட்ட நரகாசுரன் தன் தவறுக்காக மனம்

வருந்தி, தன்னைப்போல் அதர்ம காரியங்களைச் செய்து பின்னர் மனம் மாறி பிராயசித்தம் செய்ய விழைபவர் களுக்காக சில வரங்களை ஸ்ரீ கிருஷ்ணரிடம் வேண்டிப் பெற்றான்.

ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவே நரகாசுரனுக்காக 'காருண்ய தர்ப்பணம்' அளித்திட ஸ்ரீ எமதர்மராஜாவும் ஏற்றருளி அவனுக்கு நற்கதியை அளித்தருளினார்.

எனவே மனம்போனபடி அதர்மமான முறையில் வாழ்ந்து மாண்டவர்களுக்கு இந்நாளில் தர்ப்பணம் அளித்தால் அது அவர்களுடைய நற்கதிக்கு வழிவகுக்கும். அதே போல் தீயவாழ்வில் உழன்று மனம் மாறத் துடிப்பவர்களும் மேற்கூறிய முறையில் தர்ப்பண பூஜைகளையும், தான தர்மங்களையும் நிறைவேற்றிட வாழ்க்கை சீர்பெறும்.

## பீஷ்ம தர்ப்பணம்

தாய், தந்தையர் இருந்தால்கூட அவர்களுடைய பிரம்மச்சாரிகளான புதல்வர்கள் செய்யவேண்டிய தர்ப்பண பூஜைகளில் 'பீஷ்ம தர்ப்பணம்' அமைகிறது. பீஷ்ம தர்ப்பணத்தன்று

1. பிரம்மச்சாரிகள், பிரம்மச்சாரிகளாய் இறந்த தம் இளவயது கல்லூரி/ அலுவலகத் தோழர்களுக்கு தர்ப்பணம் இடவேண்டும். இதனால் சிறந்த ஆரோக்கியமும், நல்லொழுக்கமும் ஏற்பட்டு சமுதாயத்தில் சிறப்பிடத்தைப் பெறுவர்.

2. தாய், தந்தையரை இழந்த பிரம்மச்சாரிகளை ஒன்று சேர்த்து அவர்கள் தங்கள் பெற்றோர்களுக்குத் தர்ப்பணம் செய்ய, தர்ப்பண பூஜைகளுக்கு உரிய தானதருமங்களைச் செய்ய உதவ வேண்டும். ஒரு கோயில் கும்பாபிஷேகத்திற்கு இணையான நற்காரியம் இது!

இத்தகைய தர்ப்பணங்களும், சேவைகளும் நைஷ்டிக பிரம்மச்சாரியாய் வாழ்ந்த ஸ்ரீ பீஷ்மாச்சாரியாரின் பரிபூரண ஆசியைப் பெற்றுத் தருகின்றன.

மேலும், மேலே குறிப்பிட்ட தர்ப்பண பூஜைகள் தவிர எண்ணற்ற விசேஷ தர்ப்பணங்கள் உண்டு. அந்தந்த யுகங்களுக்கேற்பவும், அந்தந்த வருடத்திய நட்சத்திர அமைப்பு மற்றும் கிரஹ சஞ்சாரங்களுக்கேற்பவும் தர்ப்பண பூஜை விதிமுறைகளிலும், தானதர்ம வழிவகைகளிலும் மாறுதல்கள் ஏற்படும். எமது ப்ரம்பரையில் வரும் குருமார்கள் அந்தந்த காலகட்ட மக்களின் மனோ நிலைக்கேற்ப அவற்றை எளிமைப்படுத்தி அளிப்பர்.

ஒவ்வொரு மனிதனும் அவர்களை நாடி, அறிந்து முறையாகக் கடைபிடிப்பதோடு மட்டுமல்லாமல் அறியாமையில் வாடும் மற்ற ஏழை, எளியோருக்கு எடுத்துரைத்து அவர்களையும் ஈடுபடுத்திப் பயனடையச் செய்யட்டும்!

**போகர்:** அப்பப்பா! தர்ப்பண பூஜைகளின் மஹாத்மியத்துக்கு எல்லையே இல்லை போலிருக்கிறதே! தர்ப்பண பூஜைகளிலும் தான, தர்மங்கள் உண்டா, குருதேவா!

**அகத்தியர்:** நிச்சயம் உண்டு! தர்ப்பணம் மட்டுமல்ல, பூஜை, ஹோமம், யாகம் போன்ற ***எல்லாவித வழிபாட்டு முறைகளுமே அவற்றுக்குரித்தான தான தர்மங்களால் தான் சம்பூர்ணமடைகின்றன.***

கலியுலகில் அன்னதானமே மிகச்சிறந்த தானமாய் விளங்குகிறது. எனவே தர்ப்பண பூஜைகளைச் செய்தபின்னர், இறந்தவர்களுக்கு விருப்பமான உணவுப் பண்டங்களைச் சமைத்து, இறைவனுக்கு நைவேத்தியமிட்டு ஏழைகளுக்கு தானமாக அளிக்க வேண்டும். தர்ப்பண

பூஜை வழிபாடுகளில் உள்ள குற்றம் குறைகளையும் தான தர்மங்களே நீக்கி விடுகின்றன.

குறிப்பாக அமாவாசையன்று அன்னதானம் செய்வது மிகவும் விசேஷமாகும். பித்ருக்கள் நம்மைச் சோதனை செய்வதற்காக நோயாளிகள், ஊனமுற்றோர், பிச்சைக் காரர்கள் போன்று எந்த ரூபத்திலும் வரலாம். எனவே, அமாவாசையன்று நாள் முழுவதும் பிரட் (bread), பழம், பிஸ்கட் போன்ற ஏதேனும் உணவு வகைகளை கையில் வைத்திருந்து எவர் எங்கு கேட்டாலும் வழங்கும் நற்காரியத்தை ஒரு தீவிர வைராக்கியமாகவே அனைவரும் மேற்கொள்ள வேண்டும்.

***அன்னதானம் செய்யாவிடில் தர்ப்பண பூஜை முழுமை பெறுவதில்லை.*** இதை அனைவருக்கும் அவசியம் எடுத்துச் சொல்லுங்கள்.

**சீடர்கள்:** கருணைக்கடலே! தங்கள் பேரருளால் இதுவரை யாருக்குமே கிட்டிராத ஓர் அற்புத ஆன்மீக பொக்கிஷத்தைத் தங்கள் திருவாயிலிருந்து கேட்கும் வாய்ப்பினைப் பெற்றோம்.

**அகத்தியர்:** தாங்கள் அறிந்தால் மட்டும் போதாது, குழந்தைகளே! தர்ப்பண பூஜைகளின் முக்கியத்துவத்தை எடுத்துரைத்து உலக மக்கள் அனைவரையும் தர்ப்பணம் செய்ய வைப்பதே தங்கள் தலையாய கடமையா யிருக்கட்டும்!

**சீடர்கள்:** தங்கள் ஆணைப்படியே செய்கிறோம், குருதேவா!

(சீடர்கள் அனைவரும் பரம்பொருளாம் ஸ்ரீஅகத்தியப் பெருமானை வணங்கி துதித்தபடியே செல்கின்றனர்)

எமது வெளியீடான ஸ்ரீ அகஸ்திய விஜயம் என்னும் மாத இதழை தொடர்ந்து படித்தால் இன்னும் பல தர்ப்பண விளக்கங்களைப் பெறலாம்.

*ஓம் குருவே சரணம்*

# பித்ருக்களுக்கான தர்ப்பணம் இடும் முறை

இந்நூலில் பித்ரு தர்ப்பணம் பற்றிய பல விளக்கங்கள் அளிக்கப்பட்டுள்ளன. பித்ரு தர்ப்பனத்தின் இரண்டாம் பகுதியும் விரைவில் வெளிவர இருக்கின்றது. அதில் மேலும் பல உன்னதமான, அற்புதமான விளக்கங்களை நம் குரு மங்களகந்தர்வா ஸ்ரீலஸ்ரீ வெங்கடராம சுவாமிகள் எடுத்துரைக்கின்றார்கள். எளிதில் காண்பதற்காக (Quick reference) எளிய தர்ப்பண முறையை மட்டும் மீண்டும் இங்கு விவரிக்கின்றோம்.

## தர்ப்பண நாட்கள்

தினமும் நம் பித்ருக்களுக்குத் தர்ப்பணமளிப்பது மிகவும் சிறப்புடையது. துவிதியை, சப்தமி, ஏகாதசி, மாதப்பிறப்பு மற்றும் நம் மூதாதையர்கள் இறந்த திதியிலும் மாதந்தோறும் தர்ப்பணமளிக்க வேண்டும். அமாவாசையன்று கண்டிப்பாக காலையில் (6.00-7.00 மணிக்கு) தர்ப்பணமளித்திட வேண்டும். சில குடும்பங்களில் அமாவாசையன்று மதிய உச்சி நேரத்தில் தர்ப்பணம் அளிக்கும் பழக்கமும் உண்டு.

## தர்ப்பணத்திற்குத் தேவையான பொருட்கள்

எள், தர்பை, தாம்பாளம் (தட்டு), காவிரி, கங்கை போன்ற புண்யநதி கலந்த நீர் (இல்லாவிடில் நல்ல நீர்).

## தர்ப்பண முறை

பவழமல்லி போல தர்பையும் தேவலோகத்திலிருந்து நாட பெற்ற, மிகுந்த தெய்வீக சக்தி வாய்ந்த தாவரமாகும்.

தர்பையில் **நுனிதர்பை, கட்டை தர்பை** என்று இரண்டாகப் பிரிப்பார்கள். மெல்லிய நுனிப் பகுதி நுனி தர்பையாகும். கட்டையான அடிப்பகுதி கட்டை தர்பையாகும். ஒரு தர்பை புல்லை நடுவில், விரலால் மட்டும் (நகம்படாது) நறுக்கி நுனி தர்பை, கட்டை தர்பை என்று இரண்டாக எளிதில் பிரித்திடலாம்.

இரண்டு/மூன்று/நான்கு நுனி தர்பைகளைக் கொண்டு **பவித்ரம்** செய்து அதனை வலது மோதிர விரலில் அணிந்து தர்ப்பணம் செய்வது அபரிமிதமான பலன்களை அளிக்கும். கட்டை தர்பைகள் ''பித்ரு தேவதைகள்'' அமரும் ஆசனமாக, பலகையாகப் பயன்படும்.

1. இயன்றவர்கள் பவித்ரம் எனப்படும் தர்பையாலான மோதிரத்தை அணிந்திடுக.

2. மூன்று கட்டை தர்பைகளைக் குறுக்காகவும், மேலும் மூன்று கட்டை தர்பைகளை அதன் மேல் நெடுக்காகவும் வைத்து **''தர்பைச் சட்டம்''** அமைத்திடுக.

3. மூதாதையரின் பெயரைச் சொல்லியவாறே வலது உள்ளங்கையில் சிறிது எள்ளை வைத்துக் கொண்டு எள்ளும் நீரும் சேர்த்து வலது ஆள்காட்டிவிரல் (குருவிரல்), கட்டைவிரல் (சுக்ர விரல்)களுக் கிடையே எள்ளும் நீரும் தர்பைகளின் மேல் விழுமாறு சாய்த்து சிறிது நீரை ஊற்ற வேண்டும்.

இவ்வாறாக தர்பைச் சட்டத்தில் 12 இடங்களிலும் எள் கலந்த நீரை ஊற்றுவதே எளிதான தர்ப்பணமுறை யாகும். மூதாதையரின் பெயரைச் சொல்லி ''தர்ப்பயாமி, தர்ப்பயாமி, தர்ப்பயாமி'' என்று மூன்று முறைத் தர்ப்பணமிட வேண்டும்.

4. மந்திரம் தெரியாதோர் மூதாதையரின் பெயரை மட்டும் சொன்னால் போதுமானது. ஆனால் மந்திரங்களுக்கு உரித்தான மகத்தான தெய்விக சக்தி நிச்சயம் உண்டு. ஆகையினால் கீழ்க்கண்ட மந்திரங்களுள் எளிமையானதைத் தேர்ந்தெடுத்துத் தர்ப்பண நீர் வார்க்கையில் சொல்லித் துதித்திடுக.

*1. ஊர்ஜம் வஹந்தீ : க்ருதம்பய: கீலாலம்*

*பரிஸ்ருதம் ஸ்வதாஸ்த தர்ப்பயதமே*

*பித்ரூன் த்ருப்யத, த்ருப்யத, த்ருப்யத*

2. தமிழ் மந்திரம்

*நீத்தார் நினைவோடு*

*நெடுங்கிடையாய் நாமளிக்கும்*

*நீர்தாரை எள்ளோடு*

*நுணல் தருப்பை யாவுமாய்*

*மூத்தார் துதிபாடி*

*மூலவரை யாம் பணிவோம்*

மூதாதையர் ஒவ்வொருவருக்கும் (மொத்தம் 12) மூன்று முறை மேற்கண்ட மந்திரத்துடன் ''தர்ப்பயாமி'' (உதாரணம் - ராகவன் தர்ப்பயாமி, ராமசாமி தர்ப்பயாமி, மீனாள் தர்ப்பயாமி) என்று சேர்த்துச் சொல்லி நீர்+எள்ளை தர்ப்பைச் சட்டத்தின்மேல் வார்ப்பதே எளிய தர்ப்பண முறை.

3. தர்பைச் சட்டத்தை ஒரு தாம்பாளத்திலோ, சந்தனக் கல்லிலோ அமைக்க வேண்டும். வெறுந்தரையைத் தவிர்க்கவும்.

4. அவரவர் வசதிக்கேற்ப நவதானியங்கள், பழங்கள், நெல், அரிசி, கோதுமை, பட்டுத் துணி போன்ற வற்றின் மேலும் தர்பைச் சட்டத்தைப் பரப்பிடலாம். தர்ப்பணத்தில் ஈரமான மேற்கண்ட தான்யங்கள், நெல் போன்றவற்றைச் சமைத்து உணவாகவாக தானம் அளித்தல் மிகவும் சிறப்புடையது.

5. காருண்ய தர்ப்பணம் என்பது, புல், பூண்டு முதல் பசு, பூனை, யானை வரை அனைத்து ஜீவன்களின் நல்வாழ்விற்காகத் தர்ப்பணமளிப்பதாகும். இது ஆறறிவு படைத்த ஒவ்வொரு ஜீவனின் கடமையாகும்.

## காருண்ய தர்ப்பணத்திற்கான மந்திரம்:

*தத்தத் கோத்ராந், தத்தத் ஸர்மண:*
*வஸு வஸு ஸ்வரூபாந் பித்ருப்ய மாதுலாதி*
*வர்கத்வயா வஸிஷ்டாந் ஸர்வாந் காருணிக*
*பித்ரூந் ஸ்வதா நமஸ் தர்ப்பயாமி*

என்று சொல்லி 3 முறை தர்ப்பணம் செய்ய வேண்டும்.

6. தர்ப்பணம் முடிந்த பிறகு பித்ருக்கள் வசிக்கின்ற திசையான, பித்ருலோகம் உள்ள திக்கான தெற்கு நோக்கி 12 முறை சாஷ்டாங்கமாக விழுந்து வணங்க வேண்டும்.

7. தர்ப்பணத்தை கிழக்கு நோக்கி அமர்ந்து செய்தல் சிறப்புடையது. ஒவ்வொரு திக்கிற்கும் விதவிதமான பலன்கள் உண்டு.

8. கீழே அமராது பலகை, தர்பைப் பாய், துணி விரித்து அமர்தல் வேண்டும்.

9. தர்ப்பணமாக இட்ட நீரைக் கால்படாது தாம்பாளத்துடன் எடுத்துச் சென்று வேம்பு, வாழை, பலா, மா போன்ற ஹோம சமித்திற்குரிய, மூலிகையாக உள்ள விருட்சங்களுக்கு ஊற்றி விட வேண்டும்.

10. தர்ப்பண நீரில் உள்ள எள்ளைப் பிரித்து எஞ்சிய நீரை விருட்சங்களுக்கு ஊற்றிடுக. எள்ளைக் காக்கை, குருவிகளுக்கு இட்டிடுக!

11. அமாவாசையன்றும், தர்ப்பணமிடும் நாளிலும் குறைந்தது 12 உணவுப் பொட்டலங்களை ஜாதி, மத பேதமின்றி தானமாக அளித்தல் சிறப்புடையது. குறைந்தது 12 வாழைப் பழங்களையேனும் பசுவிற்கு அளித்தல் சிறப்புடையது.





